128

[AP]PROVED BY THE TEXT-BOOK COMMITTEE, MADRAS.
([V]ide Gazette, dated 10th November 1931, page 673)

# பூந்தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

திருச்சிராப்பள்ளி,
E. R. உயர்தரப் பாடசாலைத் தமிழாசிரியரும்
S. S. L. C. தமிழ் இலக்கண நூல் இயற்றியோரும் ஆகிய
ம. பெரியசாமிப் பிள்ளை
எழுதியது.

5 – JU[N] 1932




T. G. கோபால் பிள்ளை,
…பக்குளம், திருச்சிராப்பள்ளி.
1932

[விலை அணா 6

ஓ-,6^
N32
94499

# பூந்தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

திருச்சிராப்பள்ளி
E. R. உயர்தரப் பாடசாலைத் தமிழாசிரியரும்
S. S. L. C. தமிழ் இலக்கண நூல் இயற்றியோரும் ஆகிய
ம. பெரியசாமிப் பிள்ளை
எழுதியது.

[Revised Edition]

துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பெற்றது.




5 - JU 193

T. G. கோபால் பிள்ளை,
தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி.

பதிப்புரிமை.] 1932 [விலை அணா 6.

# முன்னுரை

பாடசாலைகளில் கீழ்வகுப்புப் பாடபுத்தகங்களாக ஏற்படும் வாசகங்கள் மாணவர்களுக்கு மொழிப் பயிற்சியையும், அறிவு வளர்ச்சியையும், நற்குண நற்செயல்களையும் உண்டாக்கக்கூடியவைகளாக இருத்தல் வேண்டும் என்பது அறிஞர்கள் அறிந்ததொன்று. இங்ஙனம் அமையும் வாசகங்களும் மாணவர்களின் பருவத்திற்கு ஏற்றவையாகவும் பொருள்களைப் பிழையறப் படிப்படியாய் அறிவுறுத்துவனவாகவும் மேன்மேலும் படிப்பில் ஊக்கத்தைத் தரக்கூடியவையாகவும் இருக்க வேண்டுவது இன்றியமையாததாகும். இத்தகைய வாசக இலக்கணங்களை யெல்லாம் கூடியவரை தழுவிச் சிறந்த முறையில் எளிய இனிய தமிழில் எழுதப் பெற்றவையாகும் இப் பூந்தமிழ் வாசகங்கள்.

இவற்றுள், உயர்ந்த நோக்கங்களை எழுப்பும் பெரியார் வாழ்க்கை வரலாறும், இயற்கைப் பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சியும், நற்குண நற்செய்கைகளைப் பற்றிய உரை நடைகளும், கடவுள் வழிபாடு, நாட்டுப்பற்று, மொழிப்பற்று ஆகியவற்றை எழுப்பும் கட்டுரைகளும், அரசியல் முறைகளும், சுகாதார விதிகளும், பழமொழிகளும், இவைபோன்ற பிறவும் அமைந்துள்ளன. செய்யுட் பாடங்கள் முற்றும் நீதி நூலாகவே இருக்குமாயின் சிறுவர்கட்குச் சிறிது சலிப்பை உண்டாக்குமாதலின் வசன பாடங்களின் இடையிடையே நீதிக் கதைகளும் பிறவும் செய்யுள் உருவமாக அமைக்கப்பெற்றுள்ளன. வாசகங்களின் உரைநடைப்போக்கு முதலில் எளிதாகவும் வரவரச் சிறிது சிறிதாக உயர்த்தப்பெற்று முளது.

இப் பூந்தமிழ் வாசகங்களைக் கண்ணுறும் ஆசிரியர்கள் இவற்றைத் தங்கள் பள்ளிக்கூடங்களில் பாடபுத்தகங்களாக வைப்பதுடன் இவை இன்னும் நன்கு அமையவேண்டின் அதற்குரிய வழிகளையும் எடுத்துக் காட்டி யுதவுமாறு வேண்டுகின்றோம்.

ம. பே.

# பொருளடக்கம்

# கடவுள் வாழ்த்து

அகரம் முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு.
தனக்(கு) உவமை இல்லாதான் * தாள்சேர்ந்தார்க்(கு)
மனக்கவலை மாற்றல் அரிது. [அல்லால்

—திருவள்ளுவர்

தந்தை தாயும் நீ; என்னுயிர்த் துணையும் நீ;
சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவும் நீ; உனையலான்
மற்றொரு துணைகாணேன்;
அந்தமும் ஆதியும் அளப்பரும் சோதியே!
ஆதியே! அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவனேனும்
சிரகிரிப் பெருமானே!

—தாயுமானவர்

---

* தாள் சேர்தல்—திருவடிகளைத் தியானித்தல்.

# பூந்தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

### 1. கடவுள்

1. இவ்வுலகத்தையும் இதிலுள்ள பொருள்களையும் நாம் உற்று நோக்கும்போது, இவை எப்படி உண்டாயின என்ற வினா நம் மனதில் தோன்றும். விதை ஒன்றை நிலத்தில் ஊன்றினால் அது முளைத்துச் சிறிது சிறிதாக வளர்ந்து பெரிய மரமாகிறது. ஆலம் விதை கடுகுபோல மிகவும் சிறியது; அதிலிருந்து முளைத்து வளரும் ஆலமரமோ மிகப் பெரியது. மிகப் பெரிய மரம் மிகச் சிறிய விதையில் எப்படி அடங்கிற்று?

2. கடலைப் பாருங்கள். அது இரைந்து பேரொலி செய்யும்போது எவ்வளவு அச்சமாக இருக்கிறது! ஆயினும் அது தன் எல்லையைக் கடந்து வருகிறதில்லை. அது கரையை உடைத்துக்கொண்டு ஊர்க்குள் புகுமாயின் உலகம் என்ன பாடுபடும்! அவ்வாறு கடலானது பெருக்கெடுத்து நாட்டை அழிக்காமல் தன் எல்லைக்குள் அடங்கி நிற்பதற்குக் காரணம் என்ன?

3. நிலத்தை உற்றுப்பாருங்கள். அதில் புல் பூண்டுகளும் செடி கொடிகளும் முளைத்து வளர்ந்து மிக அழகாய்த் தோன்றுகின்றன. சிட்டுக்குருவி முதல் தீப்பறவை வரை எத்தனைவகையான பறவைகள் இருக்கின்றன. அவைகள் எப்படி

உற்பத்தியாயின ? அவைகளுக்கு இரை எப்படிக் கிடைக்கின்றது ? அவை ஆகாயத்தில் பறப்பதும் இரை தேடுவதும் கூடுகள் கட்டிக்கொண்டு வாழ்வதும் எவ்வளவு வியப்பு! இப் பறவைகளில் சில எவ்வளவு இனிமையாய்ப் பாடுகின்றன !

4. இவ்வுலகத்தில் எத்தனையோ வகையான மிருகங்கள் காணப்படுகின்றன. அவை எங்கிருந்து வந்தன? அவைகள் உயிரோடிருப்பதற்கு ஆகாரம் வேண்டுமல்லவா? அது அவைகளுக்கு எவ்வாறு கிடைக்கிறது? உலகத்தில் எத்தனையோ கோடி மனிதர்கள் இருக்கின்றனரே! அவர்கள் அனைவருக்கும் உணவும் உடையும் எவ்வாறு கிடைக்கின்றன?

5. உலகத்துக்கு வெளிச்சம் கொடுப்பது சூரியன் அல்லவா? அந்தச் சூரியன் எப்படி உண்டாயிற்று? இராக் காலத்தில் சந்திரன் ஒளியைத் தருகின்றது; எண்ணிறந்த நக்ஷத்திரங்களும் பல்லாயிரம் விளக்குகளைப்போல் ஆகாயத்தில் விளங்குகின்றனவே! அன்றியும், அவை நீல நிறமான விண்ணில் மின்னுதல் நீலநிறப்பட்டில் வயிரக்கற்கள் பதித்தது போல் காணப்படுகின்றன அல்லவா? மேலும் அவைகள் காலம் தவறாமல் தத்தமக்குரிய இடத்தில் தோன்றுகின்றன; உரியகாலத்தில் மறைகின்றன. அவைகளை அவ்வாறு செய்விப்பது யார்?

6. இவற்றை எல்லாம் நாம் நன்கு ஆராய்ந்து பார்த்தால் இவற்றிற்குக் காரண கர்த்தா ஒருவர் உண்டென்று தோன்றும். ஒரு பானையை நாம் பார்த்தால் அதை வனைந்த குயவன் உண்டென்று நிச்சயிக்கின்றோம்? அதுபோல இவ்வுலகத்தையும் அதில் உள்ள பொருள்களையும் நாம் ஊன்றி நோக்குவோமாயின் இவற்றை ஆக்கிய ஒருவர் இருக்கவேண்டும் எனத் துணிவு கொள்ளுகிறோமன்றோ? அவர் தான் கடவுள்.

அவர் உலகத்தையும் அதிலுள்ள பொருள்களையும் படைத்துக் காத்து அழிக்கும் வல்லமையுடையவர். அவரே எல்லாப் பொருள்களுக்கும் தலைவர். மனிதராகிய நாம் சிற்றறிவு உடையவர்கள். நம்மால் மேற்கூறியவைகளில் ஒன்றையும் உண்டாக்கமுடியாது. நம்முடைய சாமானிய அறிவைக் கொண்டு உலகிற்குக் காரணமான அவரைப்பற்றி நாம் முழுதும் உணரமுடியாது. ஆகையால் நாம் அவரைக் கடவுள் என்கிறோம். கடவுள் என்னும் பதத்திற்குக் 'கடந்து நிற்பவர்' என்பது பொருள்.

7. கடவுள் யார்? அவர் எங்கே இருக்கிறார்? அவரைப் பார்த்தவர்கள் யாராவது உண்டா? என்று இங்ஙனம் சில கேள்விகளைச் சிலர் கேட்கலாம். உலகத்தையும் அதிலுள்ள எல்லாப் பொருள்களையும்படைத்துக்காக்கும் பரம்பொருளே கடவுள். அவர் உலகில் எல்லாப் பொருள்களிலும் நிறைந்து இருக்கின்றார். அவர் இல்லாத இடமில்லை. அவருக்கு உருவம் கிடையாது. ஆகையால், நாம் அவரை நமது கண்களால் பார்க்க முடியாது. ஆயினும் கடவுள் சிறந்த அன்பர்களிடத்தில் அருள்கொண்டு சிற்சில வேளைகளில் சிற்சில உருவத்துடன் வெளிப்படுதல் உண்டு. அவ்வுருவங்களைக் கொண்டு தான் கண்களால் காணமுடியாத கடவுளை நாம் வழிபடுகிறோம்.

8. கடவுள் ஒருவர்; உலகத்தில் சமயங்கள் பல. பல மதத்தினரும் ஓரே பரம்பொருளை வெவ்வேறு பெயர்களால் துதிக்கின்றனர். ஆகையால் கடவுள் ஒருவர் உண்டென்பதில் ஐயமில்லை. அவர் எங்கும் இருப்பவர்; ஆதலால் அவரைச் 'சர்வ வியாபகர்' என்கிறோம்.

9. கடவுள் எப்பொழுது பிறந்தார்? எப்பொழுது இறப்பார்? என்று நீங்கள் கேட்கலாம். அவர் ஒரு காலத்தில் தோன்றியவர் அல்லர்; என்றும் உள்ளவர்; எக்காலத்திலும் அழியாதவர். ஆகையால், அவருக்குப் பிறப்புமில்லை; இறப்புமில்லை. அவர் எல்லாம் அறிந்தவர். நாம் மறைவாகச் செய்யும் எந்தச் செயலையும் அவர் அறிவார். உலகத்தில் எந்த இடத்திலும் எக்காலத்திலும் நடைபெறும் செயல்களில் அவர் அறியாத தொன்றுமில்லை. ஆகையால், அவரை 'முற்றும் உணர்ந்தவர்' என்பார்கள். அவர் எல்லாக் காரியங்களையும் செய்ய வல்லவர். அவரால் செய்யலாகாத செயல் எதுவுமில்லை. ஆகையால் அவர் 'சர்வ வல்லவர்.'

10. கடவுள் மிக்க அருள் உடையவர். அவரது அருளினல் உலகம் நடைபெற்று வருகிறது. நாம் வாழ்வதற்கு இடமாகிய இவ்வுலகையும் நமது வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களையும் நமது உடலையும் அதிலுள்ள கருவிகளையும் படைத்தவர் கடவுள். ஆகையால், அவரை நாம் நன்றி மறவாமல் உள்ளன்போடு வாழ்த்தி வணங்கவேண்டும். கடவுள் தீயவர்களை வெறுப்பார், நல்லவர்களை விரும்புவர். ஆதலின், நாம் நற்செயல்களைச் செய்து நல்லவர்களாக ஒழுகவேண்டும். அவ்வாறு செய்வோமானல் அவர் நமக்கு என்றும் அழியாத பேரின்பத்தைத் தருவார். சிறுவர்களே! நீங்கள் நாள்தோறும் கடவுளை அன்போடு நினைத்து வழிபடுங்கள்.

"கடவுளை நம்பினோர் கைவிடப்படார்."

---

## 2. சோழ நாடு



1. முற்காலத்தில் தென்னிந்தியாவில் சேரர், சோழர், பாண்டியர் என மூன்று வம்சத்தார் அரசாண்டு வந்தனர். அவர்களுடைய நாடுகள் முறையே சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என்று சொல்லப்படும். இவைகளில் சோழ நாடு மிகச் சிறியது; ஆயினும் அது கல்வி, செல்வம் முதலிய வற்றில் சிறந்து விளங்கிற்று.

இக்காலத்திலுள்ள தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, தென் ஆற்காடு முதலிய ஜில்லாக்கள் அக்காலத்தில் சோழ நாடாக இருந்தன. இந்த நாடு மிகவும் பழமையானது; காவிரி நதி சோழ நாடெங்கும் பாய்ந்து அதை நீர்வளமுடையதாகச் செய்வதால் இது புனல் நாடு என்று பெயர் பெற்றது. காவிரிக்குப் 'பொன்னி' என்ற பெயரும் உண்டு; ஆகையால் சோழ நாட்டுக்குப் பொன்னி நாடு என்னும் மற்றொரு பெயரும் வழங்கப் பெற்றது. இந்த நாட்டில் நெல் முதலிய தானியங்

கள் நன்கு விளைதலால் மக்களுக்கு உணவுப்பொருள்கள் குறைவின்றிக் கிடைக்கின்றன. அதனால், இந்நாடு "சோழவள நாடு சோறுடைத்து" என ஔவையாரால் புகழப்பெற்றது.

2. சோழ மன்னர்களுக்கு ஐந்து தலை நகரங்கள் இருந்தன. அவை கருவூர், உறையூர், திருவாரூர், திருச்சேய்நலூர், காவிரிப்பூம்பட்டினம் என்பவை. ஆயினும் அவற்றுள் உறையூரிலும் காவிரிப்பூம்பட்டினத்திலுமே சோழ மன்னர்கள் பல நூற்றாண்டுகள் இருந்து அரசாட்சி செய்து வந்தனர். உறையூர் திருச்சிராப்பள்ளியில் உள்ளது; தஞ்சை ஜில்லாவில் காவிரியாறு கடலொடு கலக்குமிடத்தில் காவிரிப்பூம்பட்டினம் உள்ளது. அப்பட்டினம் அக்காலத்தில் சோழநாட்டின் துறைமுகப்பட்டினமாயு மிருந்தது. வர்த்தகத்தின் பொருட்டு அத்துறைமுகத்தில் வந்து தங்கும் கப்பல்கள் மிகப் பல. காவிரிப்பூம்பட்டினம் எல்லாப் பொருள்களும் நிரம்பியிருந்த ஒரு பெரிய நகரமாயிருந்தது. இப்பொழுது அந்நகர மில்லை; கடலால் கொள்ளப்பட்டது. ஆயினும், காவிரிப்பட்டினம் என்னும் பெயருள்ள ஒரு சிறிய கிராமம் இப்பொழுது காவிரி கடலில் சேருமிடத்திற்குச் சமீபமாக உள்ளது. மிகப் பழைய காலத்திலிருந்து மூன்றும் நூற்றாண்டு வரையில் சோழ மன்னர்கள் மிக்க பராக்கிரம முடையவர்களாய் இருந்தார்கள். அவர்களுக்கு அதிகாரமும் செல்வமும் சிறப்பும் மிகுந்திருந்தன. பிறகு அவர்களுடைய பலம் குன்றினமையால் பல்லவர் என்ற ஒரு வகுப்பினர் அவர்களை வென்று சோழ நாட்டைத் தம் வசப்படுத்தி ஆண்டு வந்தனர். ஒன்பதாம் நூற்றாண்டு வரையில் பல்லவர் ஆட்சி ஓங்கியிருந்தமையால் அக்காலத்திய சோழர்களைப்பற்றி யாதொன்றும் தெரியவில்லை.

3. பத்தாவது நூற்றுண்டில் மீண்டும் சோழ இராச்சியம் தலையெடுத்துப் பதின்மூன்ருவது நூற்றுண்டு வரையில் சிறப்புடன் விளங்கிற்று. சோழ நாட்டில் பற்பல அரசர்கள் தோன்றினர்கள். அவர்கள் பல்லவர்களையும் பாண்டியர்களையும் வென்று கீர்த்திபெற்ருர்கள். அக்காலத்தில் சோழ நாடு பெரிதாயிற்று. அது வடக்கே நெல்லூர் முதல் தெற்கே கன்னியாகுமரி வரையிலும் பரவியிருந்தது.

4. பிற்காலத்திய சோழ அரசர்களில் மிகக் கீர்த்தி பெற்றவன் பராந்தகன் என்பவன். அவன் மிகச் சிறந்த வீரன். பாண்டிய அரசர்களை வென்றவன் அவனே. அவன் இலங்கைத் தீவின்மீது படையெடுத்துச் சென்று அதையும் கைப்பற்றினன். அவன் சைவ சமயத்தைச் சேர்ந்தவன்; சிதம்பரத்திலுள்ள நடராஜர் கோவிலின் விமானத்திற்குப் பொன் தகடு வேய்ந்தவன். அதனல் நடராஜர் ஆலயம் 'பொற்சபை' யென்றும் 'கனகசபை' யென்றும் வழங்கப்பெறுகின்றது.

5. பராந்தகனுடைய சந்ததியில் இராஜ ராஜன் என்ற பெயருள்ள ஓர் அரசன் தோன்றினன். அவனும் மிக்க புகழ் பெற்றவன். அவன் பல சிவாலயங்களைக் கட்டினன்; தஞ்சாவூரில் 'இராஜ ராஜேச்சரம்' என்னும் ஒரு சிவன் கோயில் கட்டுவித்தான். அதற்கு இக்காலத்தில் பிரகதீஸ்வரர் ஆலயம் என்று பெயர் வழங்குகிறது. அதை உங்களில் சிலர் பார்த்திருப்பீர்கள். அவன் அரசாளத் தொடங்கிப் பதின்மூன்று வருஷங்களாவதற்குள், தென்னிந்தியா முழுவதையும் வென்றுன்; வடக்கில் வெங்கிநாட்டையும் கலிங்கநாட்டையும் கைக்கொண்டான். அவன் காலத்தில் சோழநாடு முன்னிருந்ததை விடப் பெரியதாயிற்று. அவன் தானடைந்த வெற்றிக்கு அடையாளமாகவே பிரகதீஸ்வரர் ஆலயத்தைக் கட்டினன்.

6. இராஜ ராஜன் சிவபக்தி மிகவும் உடையவன். சிவாலயங்களுக்கு மிகுந்த பொருள் கொடுத்தான். சிதம்பரத்திலுள்ள நடராஜர் கோயிலுக்கு அவன் தங்கத் தட்டுகளையும் பாத்திரங்களையும் ஏராளமாகத் தானம் செய்தான். தில்லை நடராஜர் கோயிலை மூவாயிரம் அந்தணர் அதிகாரிகளாயிருந்து நடத்தி வந்தனர். அவர்களுக்குத் தில்லைவாழ் அந்தணர் என்று பெயர். இவ்வரசனுடைய பெருங்கொடையைக் கண்டு மகிழ்ந்து அவர்கள் இவனுக்கு 'இராஜ ராஜன் சிவபாத சேகரன்' என்று பெயர் கொடுத்தார்கள்.

7. இராஜ ராஜனுடைய காலத்தில் சோழ நாடு மிக்க சிறப்படைந்து உயர்ந்த நிலையில் இருந்தது; குடிகள் இன்பமாய் வாழ்ந்து வந்தார்கள்; நாட்டில் பயிர்கள் நன்றாய் விளைந்து எங்கும் செழிப்பாயிருந்தது. ஆகையால் சோழநாடு அக்காலத்தில் எவ்வகையிலும் குறைவில்லாத நாடாக விளங்கிற்று. அவன் இருபத்தொன்பது வருஷம் அரசுசெலுத்திப் பின் இறந்தான்.

8. அவனுக்குப் பின் வந்த அரசர்கள் திறமையுடையவர்களல்லர்; பலமற்றவர்கள். பல சிற்றரசர் ஒருவரோடொருவர் சண்டையிடத் தலைப்பட்டனர். நாட்டில் கலகமும் சண்டையும் உண்டாயின. சோழருக்கு அடங்கியிருந்த சில சிற்றரசர்கள் சுவாதீனம் அடைந்தனர். அதனால் சோழருடைய ஆதிக்கம் குறைந்தது. அக்காலத்தில் வடக்கே ஓர் இராச்சியம் மிக்க பிரசித்தி பெற்று விளங்கிற்று. அதற்கு விஜய நகர ராச்சியம் என்று பெயர். விஜயநகரத் தரசன் சோழர்களை வென்று அவர்கள் இராச்சியத்தையும் தன் வசப்படுத்திக் கொண்டான். ஆகையால் ஒரு காலத்தில் மிக்க புகழ்பெற்று விளங்கின சோழ இராச்சியம் மறைந்து போயிற்று. இப்

பொழுது சோழநாடு மாத்திரமன்றி இந்தியா முழுவதுமே ஆங்கிலேயர் ஆளுகையில் இருக்கிறது.

---



## 3. உருளைக் கிழங்கு

1. உருளைக்கிழங்கு என்பது ஒருவகையான செடியின் கிழங்கு. சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன்னேதான் உருளைக் கிழங்கை நமது நாட்டினர் உணவுப் பொருளாக உபயோகிக்கத் தொடங்கினர்கள். ஆயினும், இக்காலத்தில் அது நமக்கு மிகச் சாதாரணமான உணவாய்விட்டது. கோதுமை, நெல், சோளம் முதலிய தானியங்கள் மனிதருக்கு முக்கியமான உணவுப் பொருள்கள். நமது உடலுக்குப் பலத்தையும் புஷ்டியையும் கொடுப்பதில் உருளைக் கிழங்கைத் தானியங்

களுக்கு அடுத்தபடியாகச் சொல்லலாம். உருளைக் கிழங்குச் செடி ஆதியில் அமெரிக்கா தேசத்தில் பயிரிடப்பட்டது. பின் அங்கிருந்து அதை ஸ்பெயின் தேசத்துக்குக் கொண்டு போய்ப் பயிரிட்டார்கள். பிறகு அது ஐரோப்பாவிலுள்ள பல நாடுகளில் பரவிற்று. இப்பொழுது அதை எல்லாத் தேசங்களிலும் பயிரிடுகிறார்கள்.

2. உருளைக் கிழங்குச் செடி, சுமார் இரண்டடி உயரம் வளரும். அதன் பூ ஊதா நிறமாயும் பழங்கள் நீல நிறமாயும் இருக்கும். அதன் கிழங்குதான் மனிதருக்கு ஆகாரமாக உபயோகப்படுகின்றது. அதை வேகவைத்துத் தோலை உரித்துவிட்டுப் பக்குவப்படுத்தி உட்கொள்ளுவார்கள். நமது உண்டியுடன் உருளைக் கிழங்குக் கறியும் சம்பந்தப்பட்டிருத்தல் இக்காலத்தில் சிறப்பாகக் கருதப்படுகின்றது.

3. உருளைக் கிழங்குச் செடியை அதன் கிழங்கிலிருந்து உற்பத்தியாக்குகின்றார்கள். கிழங்கில் பல கண்கள் உண்டு. ஒவ்வொரு கண்ணிலும் ஒரு முளை இருக்கும். உருளைக் கிழங்கை ஒவ்வொரு துண்டிலும் முளை இருக்குமாறு பல துண்டுகளாக்கி அத் துண்டுகளை ஏறக்குறைய மூன்றடிக்கு ஒன்றாக வரிசையாக நடுவார்கள். செடி வளர வளர வேரில் கிழங்குகள் தோன்றிப் பருக்கும். பிறகு செடியைப் பக்குவமாகப் பிடுங்கி வேரிலுள்ள கிழங்கைப் பறித்தெடுத்துக் கொள்வார்கள். இச்செடி பீடபூமியிலும் மலை நாடுகளிலும் ஏராளமாகப் பயிராகின்றது. மலைநாடுகளில் உண்டாகும் கிழங்குகள் பெரியவையாவும் மிகுந்த சுவையுள்ளவையாயும் இருக்கும். நமது சென்னை இராஜதானியிலும் உருளைக் கிழங்கைப்

பயிரிடுகிறார்கள். நீலகிரியில் விளையும் கிழங்கு மிக உயர்ந்தது.

4. ஐரோப்பாவிலுள்ள ஏழைகளும் செல்வர்களும் உருளைக் கிழங்கு இல்லாமல் உண்பதில்லை. அயர்லாந்து தேசத்திலுள்ள ஏழைகளுக்கும் உருளைக் கிழங்கே முக்கியமான ஆகாரம். ஐரோப்பியர், உருளைக் கிழங்கிலிருந்து ஒரு பசையை உண்டாக்கி, அதைத் துணிகளைச் சலவை செய்யும்போது, கஞ்சிக்குப் பதிலாக உபயோகிக்கிறார்கள்.

5. உருளைக் கிழங்கை முதன் முதலில் ஆங்கிலேயர் உண்ணத் தொடங்கியதைக் குறித்து ஒரு கதையுண்டு:—

உருளைக் கிழங்கு அமெரிக்காவில் பயிராகிவரும் காலத்தில், அமெரிக்காவுக்குச் சென்ற ஆங்கில மாலுமி யொருவன் சில கிழங்குகளை இங்கிலாந்துக்குக் கொண்டுவந்தான். அவன் அவைகளைத் தன் நண்பன் ஒருவனிடம் கொடுத்துப் பயிரிடச் செய்தான். அவை நன்றாகப் பயிராகிக் காய்க்க ஆரம்பித்தன. அவனுக்குச் செடியின் எந்தப் பாகத்தை உண்பதென்று தெரியவில்லை. ஆயினும் அவன் காய்களைப் பறித்துச் சமையல் செய்து சாப்பிட்டான். அவை சுவையாய் இருக்கவில்லை. ஆகையால் அவன் அச்செடிகளை வேரோடு பிடுங்கிக் குப்பையில் எறிந்துவிட்டான். வேர்களில் கிழங்குகள் தொங்கிக் கொண்டிருந்தன. சில நாட்கள் சென்றபின் வேலைக்காரர்கள் தோட்டத்தில் உள்ள குப்பைகளையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்துத் தீமூட்டி எரித்தார்கள். அப்பொழுது குப்பையில் அகப்பட்டு வெந்த உருளைக் கிழங்குகளின் மணம் வீசிற்று. அச்சமயத்தில் தோட்டத்தின் தலைவன் அந்த நன்மணத்திற்கு உருளைக் கிழங்குகள் தான் காரணமென்று அறிந்து, அவற்றை எடுத்து உண்டான். அவை மிகவும் சுவையாய்

இருந்தன. அது முதல் ஆங்கிலேயர் அதை உண்ணத் தொடங்கினர்கள்.

---



## 4. வரிக் குதிரை

1. வரிக்குதிரை தென் ஆப்பிரிக்காவில் மிகுதியாகக் காணப்படும் ஒருவகையான விலங்கு. அதன் உயரம் ஏறக் குறைய ஐந்தடி வரையிலும் இருக்கும். அதன் உடலில் கறுத்த வரிகள் தலை முதல் குளம்பு வரையில் நிறைந்து இருப்பதால், அது பார்வைக்கு மிக அழகாய்த் தோன்றும். இவ்விஷயத்தில் அது புலிக்கு ஒப்பாயிருக்கிறது. ஆகையால் சிலர் அதைக் 'குதிரைப் புலி' என்று சொல்லுவதுண்டு. ஆயி னும் அது குதிரைபோல் இருப்பதாலும் வரிகள் உடைமை யாலும் அதற்கு வரிக்குதிரை என்ற பெயரே தகுந்தது.

2. வரிக் குதிரைகள் பல கூடி ஒற்றுமையாக வாழும் இயல்புடையவை. ஆகையால் அவைகள் எப்பொழுதும் கூட்டம் கூட்டமாகவே சஞ்சரிக்கும். அவை எளிதில் அச்ச முறும் தன்மையுடையவை. மிகச்சிறிய சத்தமும் அவை

களுக்குச் சந்தேகத்தை உண்டாக்கும். ஆபத்து நேரிடுமென்று தெரியின் கூட்டமாயிருக்கும் வரிக் குதிரைகள் பிரிந்து அம்பு செல்வது போல விரைந்து ஓடி மறையும். அவைகள் வாலை உயர்த்திக் கொண்டும் செவிகளை நிமிர்த்திக் கொண்டும் ஓடுவது பார்வைக்கு மிக அழகாயிருக்கும்.

3. அவைகளைப் பகைவர் ஓடவிடாது மடக்கிப் பிடிக்க முயற்சித்தால், அவைகள் சுற்றி நின்று தலைகளை ஒன்றாய் மத்தியில் சேர்த்துக்கொண்டு, பின் கால்களால் உதைக்கத் தொடங்கும். ஆகையால் மனிதர் அவற்றைப் பிடித்துப் பழக்கி வசப்படுத்துவது மிகவும் அருமை. ஐம்பது அறுபது வரிக் குதிரைகள் சுற்றி நின்று உதைக்க ஆரம்பித்தால் யார்தான் அவற்றின் அருகே செல்ல முடியும்! புலி, சிறுத்தை முதலிய துஷ்ட மிருகங்களும் வரிக் குதிரைகளை நெருங்க அஞ்சும்.

4. வரிக் குதிரைகள் காட்டிலுள்ள புல்லையும் இலைகளையும் தின்று வாழ்கின்றன. காட்டில் புல்பூண்டுகள் அகப்படாவிடின் அவை நாட்டில் புகுந்து பயிர் பச்சைகளை அழிக்கும். தென் ஆப்பிரிக்காவின் காடுகளில் சில காலங்களில் ஒரு துளி மழைகூடப் பெய்யாது; குளம் குட்டைகளும் வறண்டு போம். அக்காலத்தில் வரிக் குதிரைகள் கூட்டம் கூட்டமாய் நாட்டில் பிரவேசித்துப் பயிர்களைத் தின்னும். அப்பொழுது பயிரிடுகிறவர்கள் மிக வருந்துவார்கள். மழை பெய்து காடுகள் செழிப்படைந்தால்தான் அவை மீண்டும் காட்டிற்குள் செல்லும்.

5. வரிக் குதிரையைப் பிடிப்பது மிகவும் கஷ்டமான செயல்; வருந்திப் பிடித்தாலும் அதன் மிருக குணம் எளிதில் மாறாது. ஆகையால் மனிதர் அதைப் பிடித்து வளர்ப்பதில்லை. ஆயினும் சில சர்க்கஸ் ஆட்டக்காரர்கள் வரிக்குதிரைகளைப்

பிடித்துப் பழக்கிப் பலவகையான ஆட்டங்களைக் கற்றுக் கொடுக்கிறார்கள்.

6. ஆப்பிரிக்காவிலுள்ள சில ஜாதியார் வரிக்குதிரையை வேட்டையாடிக் கொன்று அதன் மாமிசத்தை உண்கிறார்கள். அதன் தோலைப் பதப்படுத்திச் சில வேலைகளுக்கு உபயோகிக்கிறார்கள். புலித்தோலைப் போல அதன் தோலும் உபயோகப்படுகிறது.

---

## 5. மீன்

1. உலகத்தில் வசிக்கும் பிராணிகளை நடப்பன, பறப்பன, ஊர்வன, நீர்வாழ்வன என நால்வகையாகப் பிரிக்கலாம். இவற்றுள் மீன் நீர்வாழ்வனவற்றைச் சேர்ந்தது. நீரில் வசிக்கும் பிராணிகளில் மீன் முக்கியமானது. மீனை நீரிலிருந்து எடுத்துத் தரையில் போட்டால் சில நிமிஷங்களுக்குள் இறந்து விடும்.

2. மீனின் தேக அமைப்பு அது நீரில் வாழ்வதற்கு ஏற்றதாக இருக்கிறது. அதன் உடல் நீண்டு சிறிது உருட்சியான தட்டை வடிவமுள்ளது. அதுவன்றி, மத்தியில் அகன்றும் முன்புறத்திலும் பின்புறத்திலும் ஒடுங்கியும் இருக்கும். மீனின் உடல் இங்ஙனம் அமைந்திருப்பதால் அது தண்ணீரை ஊடறுத்துக்கொண்டு வேகமாய் நீந்திச் செல்லுகிறது.

3. மீன் முதுகெலும்புள்ள பிராணி. அதன் முதுகெலும்பு பல சிறிய எலும்புகளால் ஆகியது; அவை ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கும். ஆகையால் மீன் நீந்தும் பொழுது எளிதாக உடலை வளைத்து எத்திசையிலும் செல்லு

கிறது. மீனின் உடல் முழுவதும் அழகான செதில்கள், வீடுகளில் வேய்ந்திருக்கும் ஓடுகள்போல, ஒன்றின்மேல் ஒன்



ருக அமைந்திருக்கும். அவை பளபளப்பாயும், வழுவழுப்பாயும் இருக்கும். செதில்களின்கீழ் மீனுக்குத் தோலுண்டு. அத் தோலிலிருந்து கசிகிற ஒருவித எண்ணெயே செதில்களுக்கு வழுவழுப்பைக் கொடுக்கிறது. ஆகையால், மீன் நீரில் வசித்த போதிலும் அதனுடலில் நீர் ஒட்டிக்கொள்ளுவதில்லை; மீன் தண்ணீரில் வேகமாய்ச் செல்லுவதற்கும் செதில்களின் வழுவழுப்புச் சாதகமாயிருக்கிறது.

4. மீன் நீரில் நீந்துவதற்கு உதவியாகச் சிறகுகள் அமைந்திருக்கின்றன. அவை முதுகில் இரண்டும், மார்பில் இரண்டும், வயிற்றின்கீழ் இரண்டுமாக இருக்கும். அவற்றின் சகாயத்தால் மீன்கள் நீரைப் பின்புறமாகத் தள்ளி விரைவாக நீந்தும். மீனின் வாலும் இரண்டு சிறகுகளால் அமைந்ததே.

இச்சிறகுகள் அடிப்பக்கத்தில் ஒன்றாக இணைந்திருக்கும். இச் சிறகுகளே மீன் திசைமாறிச் செல்லுவதற்கு உதவுகின்றன.

5. சில மீன்களுக்கு உடலின் இருபுறத்திலும் இரண்டு நீண்ட சிறகுகள் உண்டு. அவற்றால் அவை நீரிலிருந்து கிளம்பிச் சிறிது தூரம் பறந்து, மீண்டும் ஜலத்தில் விழும். அவைகளுக்குப் பறக்கும் மீன்கள் என்று பெயர். மீனுக்கு இரண்டு வட்டமான கண்கள் தலையின் இருபுறத்திலும் அமைந்திருக்கும். அவை பெரும்பாலும் சிவப்பாயும் பளபளப்பாயுமிருக்கும். விழிகளைக் கண்ணாடி போன்ற பிரகாசமான ஒரு பொருள் மூடிக்கொண்டிருக்கிறது. மீனின் வாய் அகலமானது. வாயில்மிகவும் கூர்மையான ஊசிபோன்ற சிறிய பற்களுண்டு. அவற்றின் உதவியால் மீன் ஆகாரத்தைக் கௌவிப்பிடித்து அப்படியே விழுங்கிவிடும். நீரில் வசிக்கும் மிகச் சிறிய பூச்சி புழுக்களும் கடலிலுண்டாகும் பாசிகளும் மீன்களுக்கு முக்கியமான உணவாம். பெரிய மீன்கள் சிறிய மீன்களையும் மீனின் முட்டைகளையும் தின்பதுண்டு.

6. மற்ற பிராணிகள் உயிரோடிருப்பதற்குக் காற்று அவசியமாவதுபோல மீன் உயிர்வாழ்வதற்கும் காற்று இன்றியமையாதது. எல்லாப்பிராணிகளும் ஆகாயத்திலுள்ள காற்றைச் சுவாசிக்கின்றன. மீன் காற்றைச் சுவாசிப்பது மிக வியப்பாயிருக்கும். நீருக்குள் இருந்து கொண்டே அதிற் கலந்திருக்கும் காற்றைச் சுவாசிக்கின்றது. அது எப்படி? மீனுக்கு வாயின் உட்புறத்தின் இருபக்கங்களிலும் இரண்டு சுவாச உறுப்புக்கள் உண்டு. அவைகளுக்குச் செவுள்கள் என்று பெயர். மீன் சுவாசிக்கும்போது நீரைவாயால் உட்கொள்ளும்.செவுள்கள் அந்த நீரில் கலந்திருக்கும் காற்றைக் கிரகித்துக்கொள்ளும்; நீர் செவுள்களிலுள்ள இரு பிளவுகளின் வழியே

வெளிவந்துவிடும். இதனால்தான் மீன் நீரில் சஞ்சரிக்கும் போது இப்பிளவுகள் அடிக்கடி திறக்கப்படுகின்றன.

7. மீன் பறவைகளைப் போலவே முட்டையிடுகின்றது. ஒரு மீன் பலநூறு முட்டைகளிடும். ஆயினும், அது பறவைகளைப்போல அடைகாப்பதில்லை. முட்டைகள் நீரில் மிதந்து சூரிய வெப்பத்தால் வெடிக்கும். அவற்றினின்றும் குஞ்சுகள் வெளிப்படும். குஞ்சுகள் வெளிப்பட்டவுடனே அவை தங்கள் இஷ்டப்படி நீந்தவும் ஆகாரம் தேடவும் தொடங்கும். மீன் குஞ்சுக்கு நீந்தப் பழக்க வேண்டுவதில்லை. அது தானாகவே நீந்தக் கற்றுக்கொள்ளும்.

8. மீன்களில் பலவகை யுண்டு. சில மீன்கள் படகைப் போல் மிகப் பெரிதாயிருக்கும். அவை சில சமயங்களில் ஒரு மனிதனையும் விழுங்கிவிடும். சில மீன்கள் நமது சுண்டு விரலினும் சிறியவை. சில மீன்கள் வட்ட வடிவமாய் இருக்கும். சில மீன்கள் வாளைப்போல் நீண்டிருக்கும். சில மீன்கள் சிவப்பு ஊதா முதலிய பலவகையான நிற முடையவை. அவை பார்வைக்கு மிக அழகாய் இருக்கும். சுறுமீன் என ஒருவகையான மீன் உண்டு. இச் சுறுமீனிலும் பலவகை யுண்டு. ஒருவிதமான சுறுவுக்குப் பலமான கொம்பு தலையில் முளைத்திருக்கும். அதற்குக் 'கொம்பன் சுறு' என்று பெயர். அது தன் கொம்பினால் பெரிய படகுகளையும் குத்திக் கவிழ்த்துவிடும்.

9. மீன்களை மனிதர்களிற் சிலர் ஆகாரமாக உபயோகிக்கிறார்கள். சில மீன்களிலிருந்து ஒருவகையான எண்ணெய் எடுக்கிறார்கள். அவ்வெண்ணெய் மருந்தாக உபயோகப்படுகிறது. மீனெண்ணெய் மெழுகுவர்த்தி செய்யவும் உபயோகப்படுகிறது. மனிதர் மீன்களைப் பிடித்து விற்று ஏராளமான

பணம் சம்பாதிக்கிறார்கள். மீன்களினால் நமது துறைத்தனத்தாருக்கு மிகுந்த வருமானம் கிடைக்கிறது.

---

## 6. ஔவையார்

1. ஔவையார் என்பவர் முற்காலத்தில் தமிழ் நாட்டில் கல்வியறிவினால் மிக்க சிறப்படைந்திருந்த ஒரு பெண் புலவர். ஔவை என்னும் சொல்லுக்குக் கிழவி என்று பொருள். ஔவையார் முதுமைப் பருவத்தோடு பல ஆண்டுகள் வாழ்ந்திருந்தமையால் அப்பெயர் பெற்றனர். அவருடைய கல்வித்திறத்தையும், சொல் நயத்தையும் புகழ்ந்து பாராட்டாதவர் எவருமில்லை. ஔவையார் இயற்றிய ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய நீதி நூல்களை நீங்களும் படித்திருப்பீர்கள்.

2. முற்காலத்திலே பாண்டிய நாட்டில் தமிழை விருத்தி செய்வதற்கு முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்று சங்கங்கள் இருந்தன. அவற்றுள் கடைச் சங்கம் ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன் மதுரையில் நடைபெற்றது. அக்காலத்தில் ஔவையார் ஒரு சிறந்த புலவராக வாழ்ந்திருந்தார்.

3. ஔவையார் சரித்திரத்தைப் பற்றிப் பல கதைகள் வழங்கி வருகின்றன. அவற்றுள் ஒன்று வருமாறு: ஆதியென்னும் புலைச்சியைப் பகவன் என்னும் பிராமணன் காதலித்து மணம் செய்து கொண்டான். அவர்கள் தங்களுக்குள் செய்துகொண்ட ஓர் உடன்படிக்கையின்படி, தங்களுக்குப் பிறந்த குழந்தைகளைப் பிறந்தவிடத்திலேயே விட்டுச்செல்வது வழக்கம். அவ்வண்ணமே முதலில் பிறந்த ஔவையை

அவர்கள் உறையூரில் ஒரு சாவடியில் விட்டு நீங்கினர். அக் குழந்தையை ஒரு பாணன் கண்டெடுத்து வளர்த்துவந்தான். ஔவை சகல கலைகளையும் கற்று, நுட்பமான அறிவினை யுடையவராய் விளங்கினர்; நமது தாய் மொழியாகிய தமிழில் தேர்ச்சி பெற்றுப் புலவரானர்.

5. ஔவையார் காலத்தில் அதிகமான் என்னும் ஒரு சிற்றரசன் தகடூரில் செங்கோல் செலுத்திவந்தான். அவனுக்கு அதிகமான் நெடுமான் அஞ்சி என்றும் பெயர்; தகடூர் இக் காலத்தில் தர்மபுரி என வழங்கப்படுகிறது. அது சேலம் ஜில் லாவில் உள்ளது. அவன் இரப்பவர்க்கு இல்லையென்று சொல் லாமல் கொடுப்பவன்; கொடையில் சிறப்புற்ற கடையெழு வள்ளல்களில் ஒருவன்.

5. ஔவையார் அதிகமானிடத்தில் மிக்க நட்புடைய வராய் இருந்தார். ஒரு சமயத்தில் முனிவர் ஒருவர் அதிக மானுக்கு ஓர் அரிய நெல்லிக்கனியைக் கொடுத்தார். அந் தக் கனி தன்னை உண்டவர்களுக்கு நீண்ட ஆயுளைக் கொடுக்க வல்லது. அதிகமான் தன்னினும் ஔவையாரை மிக உயர்ந்த வராகக் கருதி அந்த நெல்லிக்கனியை அவருக்குக் கொடுத் தான். ஔவையாரும் அவனுடைய அன்பையும் ஈகையை யும் வியந்து அவனைப் போற்றிப் பல பாடல்கள் பாடினர். ஔவையார் அதிகமான் கொடுத்த நெல்லிக் கனியை உண்டு, அதன் மகத்துவத்தால் நெடுங்காலம் உயிரோடு இவ்வுலகத்தில் வாழ்ந்திருந்தார் என்பது பல அறிஞர்களின் எண்ணம்.

6. ஔவையார் காலத்திலிருந்த தமிழ் நாட்டு அரசர் கள் அவரை மிகவும் கௌரவப்படுத்தினர்கள். புறநானூறு

முதலிய சங்கநூல்களில் ஒளவையார் இயற்றிய பாடல்கள் பல இருக்கின்றன. ஒளவையார் இயற்றிய ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி முதலிய வேறு சில நூல்களும் வழங்கிவருகின்றன. அவற்றுள் சில சிறுவர்களுக்கென்றே இயற்றப்பட்டவை. அவை ஆங்கில பாஷையிலும் மொழிபெயர்க்கப் பட்டிருப்பதால் ஒளவையின் புகழ் உலகமெங்கும் பரவியிருக்கிறது. ஒளவையாரின் வரலாற்றால் பெண்களும் கல்வி கற்றுப் புலமை அடையலாமென்றும், முற்காலத்தில் பெண்கள் கல்வி கற்றுவந்தனரென்றும் அறியலாம். நாமும் நமது தாய்மொழியாகிய தமிழை நன்கு கற்றுத் தேர்ச்சியடைவதோடு நமது பெண் மக்களையும் தமிழ்க் கல்வி கற்குமாறு செய்யவேண்டும்.

---

## 7. பூமி

1. பிள்ளைகளே, நீங்கள் ஒரு பெரிய தேசத்தில் வசிக்கின்றீர்கள். அதன் பெயர் இந்தியா. அது கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய மூன்று பக்கங்களிலும் சமுத்திரத்தால் சூழப்பட்டிருக்கிறது. இந்தியாவைப்போல் இன்னும் பல நாடுகள் உண்டு. இந்தியாவை அடுத்துள்ள சமுத்திரத்தைப்போல் இன்னும் பல சமுத்திரங்களும் உண்டு. இந்தத் தேசங்களும் சமுத்திரங்களும் உள்ளதே பூமி என்பது.

2. பூமியை நாம் பார்க்கும்போது அது தட்டையாய்த் தோன்றுகிறது. ஆயினும் உண்மையில் அது தட்டையானதல்ல. அது ஓர் ஆரஞ்சுப் பழத்தைப்போல் உருண்டையானது. பூமி உருண்டை என்பதற்குப் பல சான்றுகள் உண்டு.

நீங்கள் சமுத்திரக் கரைக்குச் சென்று கரையை நோக்கி வரும் கப்பலைக் கவனித்துப் பாருங்கள்.



3. கப்பல் தூரத்தில் வரும்போது முதலில் பாய்மரம் தெரிகிறது; பிறகு பாய்களும் புகைக் குழாய் முதலியவை



களும் தெரிகின்றன. கப்பல் சமீபத்தில் வந்தபின் அடித்தட்டோடு கப்பல் முழுவதும் தெளிவாய் நமக்குத் தெரிகின்றது. பூமி உருண்டையா யிருப்பதால்தான் நமக்குக் கப்பல் இவ் விதமாகத் தோன்றுகிறது. பூமி தட்டையாய் இருந்தால் கப்பலின் முழு உருவமும் தூரத்தில் சிறியதாகவும் நெருங்கி வரவரப் பெரியதாகவும் தோன்றுமே யொழிய மேற்கூறிய வாறு தோன்றாது.

4. கப்பல் கரையிலிருந்து சமுத்திரத்தில் செல்லும் பொழுதும் முதலில் அதன் அடிப்பாகம் மறையும்; பின்பு நடுப்பாகம் மறையும்; கடைசியாக நுனிப்பாகத்தோடு கப்பல்

முழுதும் மறைந்துவிடும். பூமி உருண்டையா யிருப்பதால் தான் கரையிலிருந்து செல்லும் கப்பல் இவ்வாறு படிப்படியாய் மறைகிறது.

5. எறும்பு ஒன்று ஒரு கிச்சிலிப்பழத்தின்மேல் ஏறி, ஓர் இடத்திலிருந்து பக்கங்களில் விலகாமல் நேராய் ஊர்ந்து செல்லுமானுல், முன் புறப்பட்ட இடத்துக்கே வந்து சேரும். ஏன் ? கிச்சிலிப்பழம் உருண்டையாய் இருப்பதனுலல்லவா ? நாமும் பூமியில் ஓர் இடத்திலிருந்து புறப்பட்டு எத்திசையை நோக்கியாவது நேராகச் சென்றுகொண்டே இருந்தால் முதவில் நாம் புறப்பட்ட இடத்துக்கே வந்து சேர்வோம். இதனுலும் பூமி உருண்டையென்று தெரிகிறது.

6. இந்த உருண்டையான பூமியின் மேற்பரப்பில் இயற்கையாகவே சிலபாகம் நிலமாயும் சிலபாகம் நீராயும் இருக்கின்றன. நிலமாக இருக்கும் பகுதி தேசம், கண்டம் முதலிய பெயர்களால் வழங்கப்படும். நீராக இருக்கும் பகுதி கடல், சமுத்திரம் என்னும் பெயர்களால் வழங்கப்படும். நிலப்பகுதி ஒரு பங்கும் நீர்ப்பகுதி மூன்று பங்குமாகப் பூமி அமைந்துள்ளது. ஆகையால் பூமி என்பது நிலமும் நீரும் சேர்ந்த மிகப் பெரிதான ஓர் உருண்டை யென்பதை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

7. பூமி மிகவும் பெரியதாய் இருப்பதாலும் நாம் பார்ப்பது அதில் மிகச் சிறிய பாகமாதலாலும் அது நமக்குத் தட்டையாகத் தோன்றுகிறது. அது அசையாமல் இருப்பதாகவும் நமக்குத் தோன்றுகிறது. ஆயினும் உள்ளபடி பூமி அசைந்து கொண்டேதான் இருக்கிறது. பூமி இரண்டு விதமாய் அசைகிறது. இந்த அசைவுக்குச் சலனம் என்று பெயர்.

8. பூமி பம்பரம் சுழல்வது போலத் தன்னைத்தானே சுற்றிக்கொள்ளுகிறது. பூமி தன்னைத்தானே ஒரு முறை சுற்றுவதற்கு இருபத்து நான்கு மணி நேரம் வேண்டும். இந்தச் சலனத்தால் இரவும் பகலும் உண்டாகின்றன. பூமி ஒரு முறை தன்னைச் சுற்றுவதற்கு வேண்டிய கால அளவை நாம் ஒரு நாள் என்கிறோம். இப்படிப் பூமி தன்னைத்தான் சுற்றுவதோடு சூரியனையும் சுற்றி வருகிறது. இந்தச் சலனத்தால் பருவ காலங்கள் உண்டாகின்றன. பூமி சூரியனை ஒரு தரம் சுற்றி வருவதற்கு முந்நூற்று அறுபத்தைந்தேகால் நாட்கள் செல்லும். இந்தக் கால அளவைத்தான் நாம் ஒரு வருஷம் என்கிறோம்.

9. இப்பொழுது நீங்கள் பூமியைப்பற்றி கவனிக்க வேண்டிய விஷயங்களாவன:—

I. பூமி நீரும் நிலமும் சேர்ந்த ஒரு பெரிய உருண்டை வடிவமானது; அது தட்டையானதன்று.

II. அது இருபத்து நான்கு மணி நேரத்துக்கு ஒரு முறை தன்னைத்தானே சுற்றுகிறது; அதனால் இரவும் பகலும் உண்டாகின்றன.

III. ஒரு வருஷத்திற்கு ஒரு முறை அது சூரியனைச் சுற்றுகிறது. அதனால் பருவகாலங்கள் உண்டாகின்றன.

---



## 8. பருத்திச் செடி

1. நமது வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களில் ஆடை ஒன்று. நாம் பெரும்பாலும் பருத்தி ஆடையை உபயோகிக்கிறோம். பருத்தியாடை பஞ்சை நூலாக நூற்று நெய்யப்படுகின்றது. பஞ்சு ஒருவகைச் செடியில் உண்டாகிறது. அச்செடிக்குப் பருத்திச் செடி என்று பெயர்.

2. பருத்திச்செடி நமது தேசத்தில் மிகுதியாகப் பயிராகின்றது. நமது சென்னை இராஜதானியில், திருநெல்வேலி, இராமநாதபுரம், கடப்பை, கர்நூல், பல்லாரி, கோதாவரி, கிருஷ்ணு முதலிய ஜில்லாக்களில் அதை அதிகமாகப் பயிரிடுகிறார்கள். இன்னும் அது பம்பாய் இராஜதானியில் பல பாகங்களிலும், குஜராத்திலும், பீஹார்மாகாணத்திலும் ஏராள

மாகப் பயிரிடப்படுகின்றது. ஆயினும் திருநெல்வேலி ஜில்லாவில் விளையும் பருத்தியே மிகச் சிறந்தது. எகிப்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய தேசங்களிலும் பருத்தி பயிராகிறது.

3. பருத்தியில் இரண்டு வகையுண்டு. ஒரு வகைக்குச் செடிப் பருத்தி என்று பெயர். அச்செடி ஏறக்குறைய நான் கடி உயரம் வளரும்; பிறகு படர்ந்து விசாலித்து ஒரு புதர் போல் ஆகும். இந்தச் செடிப்பருத்தியில் உண்டாகும் பஞ்சு தான் ஆடைகள் நெய்வதற்கு மிகுதியாக உபயோகப்படுகிறது.

4. இன்னொருவிதமான பருத்தி மரமாக வளருகிறது. அது இந்தியாவிலும் சீனதேசத்திலும் காணப்படும். அதற்கு மரப்பருத்தி என்று பெயர். அது சுமார் இருபதடி உயரம் வளரும். அதைப் பயிரிடுகிறவர்கள் அது உயரமாய் வளர்ந்த பின் கிளைகளைத் தறித்து விடுவார்கள். அது நன்றாய்க் காய்க்கும். காய்களுக்குள் பஞ்சும் கொட்டையும் நிறைந்திருக்கும். இப் பருத்தி மரங்கள் பல வருஷங்கள் நிலைத்து நின்று ஆண்டுதோறும் காய்த்துக் கொண்டிருக்கும்.

5. ஆயினும், செடிப்பருத்தியே எங்கும் மிகுதியாகப் பயிரிடப்படுகின்றது. அதைப் பயிரிடுவதற்குக் கரிசல் நிலமே ஏற்றது. ஆடி ஆவணி மாதங்களில் கோடைமழை பெய்தபின், நிலத்தை நன்றாய் உழுது ஆட்டுப்புழுக்கை மாட்டுச் சாணம் முதலியவற்றை எருவாக இடுவார்கள். எனும் புத் தாள் புண்ணாக்குமுதலியவற்றையும்எருவாகஉபயோகிப்பதுண்டு. விதைப்பதற்கு வேண்டிய பருத்தி விதையைத் தேர்ந்தெடுத்து அதில் ஒட்டிக்கொண்டிருக்கும் பஞ்சு போகும்படி சாணி நீரில் ஊறவைத்து உலர்த்தி வைத்துக்கொள்வார்கள்.

6. ஆவணி, புரட்டாசி மாதங்களில் மீண்டும் நிலத்தை உழுது படைச்சாலில் விதையை விதைப்பார்கள். சிலர் பருத்தி விதைகளை நாற்றுவிட்டு, அவை முளைத்து ஓரடி உயரம் வளர்ந்தபின், அவற்றைப் பிடுங்கி இரண்டு மூன்றடிக்கு ஒன்றாக வரிசையாய் நடுவார்கள். பருத்தி விதையிலிருந்து முளை கிளம்பும்போது மழை மிகுதியாகப் பெய்தல் கூடாது. செடி வளரும்போது நல்ல மழையாக மாதத்திற்கொருமுறை இரண்டு மூன்று தடவை மழை பெய்தால் அதுவே செடியின் வளர்ச்சிக்குப் போதுமானது. கரிசல் நிலத்தில் ஒருதடவை மழை பெய்தால் அந்நிலத்தில் சுவறும் ஈரம் பல நாட்கள் வரையில் காய்ந்துபோகாதிருக்கும். அதனால் தான் நெல் முதலிய பயிர்களுக்கு வேண்டிய அளவு நீர் பருத்திக்கு வேண்டுவதில்லை. பருத்தி காய்க்கும் பருவத்தில் மழை பெய்யாதிருத்தல் நல்லது.

7. பருத்திச்செடிகள் நன்றாய் வளர்ந்தால் அவை மிகுந்த பலனைத் தரும். பருத்தியின் பூ மஞ்சள் நிறமுடையது; காய்கள் பச்சை நிறமாயிருக்கும். காயில் மூன்று நான்கு அறைகள் இருக்கும். ஒவ்வொரு அறையிலும் பஞ்சும் விதைகளும் நிறைந்திருக்கும். காய் முற்றி நெற்றானவுடன் வெடிக்கும். அப்போது பஞ்சு வெளிப்படும். பஞ்சு மிக்க வெண்மையாய் இருக்கும். ஆதலால் வெடிக்கும் காலத்தில் பருத்திக் கொல்லையைப் பார்த்தால் அது மிக அழகாய்த் தோன்றும். அக்காலத்தில் ஆண்களும் பெண்களுமாகப் பலகூலியாட்கள் சென்று காய்களைப் பறித்துக் கூடைகளில் சேர்ப்பார்கள். இவ்வாறு சேகரிக்கப்பட்ட பஞ்சில் விதைகள் கலந்திருக்குமல்லவா? அவ்விதைகளை இயந்திரங்களின் உதவியைக்கொண்டு வேறு பிரித்துப் பஞ்சைப் பொதிகளாகக் கட்டி வியாபாரத்துக்

கனுப்புவார்கள். மேற்கூறிய வண்ணம் தயாரிக்கப்படும் பஞ்சே நூலாக நூற்று ஆடைகளாக நெய்யப்படுகிறது.

8. நமது நாட்டுப் பஞ்சில் பெரும்பகுதி வெளி நாடு களுக்கு அனுப்பப்படுகின்றது. இங்கிலாந்தில் பருத்திச் செடி பயிராகிறதில்லை. ஆகையால் இந்தியாவில் விளையும் பஞ்சு முக்கியமாய் இங்கிலாந்திற்கே அனுப்பப்படுகிறது. அங்குள்ள தொழிலாளர் பெரிய இயந்திரங்களின் உதவியால் அதை நூலாகவும் துணியாகவும் செய்து மீண்டும் இந்தியா விற்கு அனுப்புகின்றனர்.

9. முற்காலத்தில் நமது நாட்டில் மிகவும் சிறந்த துணிகள் நெய்யப்பட்டுவந்தன; தொழிலாளர்கள் தாங்களே பஞ்சிலிருந்து நூல் நூற்று, நெசவு செய்தார்கள். இக் காலத்திலோ நெசவுக்கு வேண்டிய நூல் முழுதும் சீமையி லிருந்தே வந்துவிடுகின்றது. ஆயினும், இப்பொழுது நமது தேசத்திலேயே நூல் நூற்று வஸ்திரங்கள் நெய்ய வேண்டு மென்ற ஒரு புதிய கிளர்ச்சி உண்டாயிருக்கின்றது. அவ்வண் ணமே பலவிதமான ஆடைகளும் நெய்யப்படுகின்றன. அவைகள் இன்னும் நல்ல முறையில் மிக அதிகமாக நெய்யப் பட்டால் நம்மவர்க்கு மிகுந்த பயன் உண்டாம். வெளிநாட்டுத் துணிகள் இயந்திர சகாயத்தால் மிகக் குறைந்த நேரத்தில் மிக அதிகமாக நெசவு செய்யப்படுவன. ஆகையால் அவை குறைந்த விலைக்குக் கிடைக்கின்றன. நமது நாட்டில் நெசவு செய்யும் பெரிய இயந்திரசாலைகள் மிகுதியாக இல்லை. அதனால் நம்மவர் கள் கைத்தறிகளைக் கொண்டே இன்னும் நெசவு செய்து வரு கிறார்கள். ஆதலின் நமது நாட்டுத் துணிக்குச் சீமைத்துணியை விட விலை அதிகமாகக் கொடுக்கவேண்டியிருக்கிறது.

10. மனிதருக்கு முதலில் உணவும் இரண்டாவதாக உடையும் அவசியமானவை. இவ்வுடைக்கு மிகுதியும் பயன் படுவது பஞ்சு. ஆட்டு மயிரினாலும் பட்டினாலும் நெய்யப்

படும் ஆடைகளைவிடப் பருத்தி நூலினால் நெய்யப்படும் ஆடையே மிகவும் உபயோகமாக இருக்கின்றது. ஆகையால் பருத்திச் செடி நமக்குக் கடவுளால் கொடுக்கப்பட்ட ஒரு பெரும் பாக்கியமென்றே நாம் கருதவேண்டும். பருத்திக் கொட்டை கால்நடைகளுக்கு உணவாகிறது. பருத்திக் கொட்டையிலிருந்து ஒருவிதமான எண்ணெய் இறக்கு கிறார்கள்; அது விளக்கெரிக்கவும், சோப்பு என்னும் சவக் காரம் செய்யவும் உதவுகிறது. பருத்தியின் வேர் மருந்தாக வும் உபயோகப்படுகிறது.

---

## 9. சாரணர் படை

1. இந்தப் படத்தில் நான்கு சிறுவர்கள் ஒரே விதமான உடை உடுத்திக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கையில் கோல் பிடித்த வண்ணமாய் நிற்கிறார்கள். இவர்களைப் போன்ற சிறுவர்களை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? ஆம், பார்த்திருப்பீர்கள். இவ்விதமான சிறுவர்கள் இப்பொழுது எல்லா உயர்தரப் பாடசாலைகளிலும் உண்டு. சில ஆரம்பப் பாடசாலைகளிலும் இவர்களைக் காணலாம்.

2. இவர்களுக்குச் சாரணர் என்று பெயர். சாரணர் ஆங்கிலத்தில் 'ஸ்கோட்' என்று சொல்லப்படுவார். நாட்டி லுள்ளவர்களின் நன்மைக்கேற்ற தொண்டுகளைச் செய்வது இவர்களுடைய கடமை. ஆகையால் இவர்களைத் தொண்டர் என்றும் சொல்லுவதுண்டு. பிறருக்கு நன்மை செய்வது மிக வும் சிறந்த பணியல்லவா? ஆகையால் இப்பொழுது பாட சாலைகளில் கல்வி பயிற்றுவதோடு தேச நன்மைக் கேற்ற தொண்டுகளைச் செய்வதற்கும் சிறுவர்களைப் பழக்கவேண்டு

மென்ற ஒரு புதிய இயக்கம் உண்டாயிருக்கிறது. அந்த இயக்கத்துக்குச் 'சாரணர் இயக்கம்' என்று பெயர். ஆகையால் இப்பொழுது ஒவ்வொரு பாடசாலையிலும் சில சிறுவர்களைச் சேர்த்து அவர்களுக்குத் தேசத் தொண்டு செய்யப் பழக்கிவருகின்றனர்.

3. தேச நன்மைக்காக உழைக்கும் சாரணர்கள் தேக சௌக்கியமும் பலமும் உடையவர்களாக இருக்கவேண்டும். அவை இல்லாவிட்டால் அவர்கள் வருந்தி யுழைக்க முடி



யாது. சமயத்தில் உதவி செய்வதே சாரணருடைய முதற் கடமை. அவர்கள் மனிதருக்கு மாத்திரமன்றி மற்றெல்லாப் பிராணிகளுக்கும் சமயம் நேரிடும்போது வேண்டிய உதவி செய்வதற்கே இந்த உடலைக் கடவுள் கொடுத்திருக்கிறார் என்று உணரவேண்டும்.

4. சாரணன் எவ்வித கஷ்டம் நேரிட்டபோதிலும் உண்மையே பேசவேண்டும். ஒருபோதும் பொய் பேசலா

காது. எவ்விதமான தீய செய்கையும் அவனிடத்தில் இருத்தல் தகாது. அவனிடத்தில் தெய்வ பக்தி, தாய் தந்தையரைப் பேணல், குருபக்தி, இராஜபக்தி, ஜீவகாருண்யம், ஒற்றுமை, பரோபகாரம் முதலிய சிறந்த குணங்கள் இருத்தல் அவசியம். பிறருக்கு உதவி செய்ய எப்பொழுதும் தயாராய் இருக்கவேண்டும். "தயாராய் இரு" என்பதே சாரண இயக்கத்தின் முதன்மையான வாக்கியம்.

5. சாரணர் பலர் சேர்ந்த தொகுதிக்குச் 'சாரணர் படை' அல்லது 'தொண்டர் படை' என்று பெயர். அப்படையைச் சேர்ந்தவர்கள் ஒருவரை யொருவர் உடன்பிறந்த சகோதரர்போல் பாவிக்கவேண்டும். பிறரிடத்திலும் அன்புடையவர்களாய் இருக்கவேண்டும். ஜாதிபேதம் மதபேதம் அவர்களிடத்தில் இருத்தல் கூடாது.

6. சாரணர் எல்லாப் பிராணிகளிடத்திலும் அன்புடையவர்களாய் இருக்கவேண்டும். இதுதான் ஜீவகாருண்யம் எனப்படும். எந்தப் பிராணிக்கும் துன்பம் செய்யக் கூடாது. எந்தப் பிராணிக்காவது துன்பம் நேரிட்டால் உடனே அதை நீக்கத் தன்னால் ஆனமட்டும் முயற்சி செய்ய வேண்டும். தன்னுயிர்போல் பிற உயிர்களைக் காப்பவனே உண்மையான சாரணன்.

7. சாரணருக்கு அடக்கம் சிறந்த குணம் ஆகும். எல்லா விஷயங்களையும், ஒரு சாரணன் அறிந்திருந்தபோதிலும், தன்னிலும் அதிகமாய்த் தெரிந்தவர்கள் உண்டென்று கருதி, அடங்கி இருத்தல் வேண்டும்; விரைவாக ஒரு காரியத்தையும் செய்யலாகாது; ஒரு வார்த்தையும் சொல்லக் கூடாது. பெரியோர்கள், தன்னுடைய அணித்தலைவர் முதலியவர்களுடைய உத்தரவுக்குச் சாரணன் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும்.

8. சாரணன் தனக்கு எவ்வித கஷ்டம் நேரிட்டாலும் பொறுமையுடன் இருக்கவேண்டும். சாரணனுக்குக் கோபம் கூடாது. அவன் எப்பொழுதும் சாந்தகுணமுடையவனாய் இருத்தல்வேண்டும். மேல் அதிகாரிகள் எதைச் சொன்ன போதிலும் மனம் சலிக்காமல் முகம் மலர்ந்து செய்யவேண்டும். சிக்கனமாய்ச் செலவுசெய்பவனே உத்தமமான சாரணன்.

9. திருவிழாக் காலங்களில் சண்டை சச்சரவு திருட்டு முதலிய குற்றங்கள் நடவாமல் பார்த்துக் கொள்ளல், வழி தெரியாதவர்களுக்கு வழிகாட்டுதல், காணாமற்போன குழந்தைகளைத் தேடிப்பிடித்தல் முதலிய தொண்டுகளைச் சாரணர் செய்வார்கள். சாரணர் இயக்கம் சிறுவர்களை உண்மையான தேசத் தொண்டர்கள் ஆக்குகிறது; அவர்களிடத்தில் இராஜ பக்தி உண்டாகும்படி செய்கிறது; பிற்காலத்தில், அவர்கள் தங்கள் தேச நன்மைக்கேற்ற காரியங்களைச் செய்யத் தூண்டுகிறது. ஆகையால், சிறுவர்களே! நீங்கள் சாரணர் படையில் சேருங்கள்.

---

## 10. நடுநிலை குன்றுமை

1. நமது தேசத்திற்கு வடமேற்கில் வெகு தூரத்தில் துருக்கி என்று ஒரு தேசமிருக்கிறது. அது மகம்மதியர்கள் வசிக்கும் தேசம். துருக்கி தேசத்து அரசருக்கு சுல்தான் என்று பெயர். அவரும் மகம்மதியரே.

2. துருக்கி தேசத்தில் திமிர்ணு என்று பெயருள்ள ஒரு சிறிய பட்டணமிருந்தது. அங்கு மகம்மதுகான் என்னும் பெயருள்ள ஒரு வர்த்தகன் இருந்தான். அவன் மளிகைக் கடை யொன்று வைத்து ஜீவனம் பண்ணிக்கொண்டு வந்தான்.

3. மகம்மதுகான் பேராசைக்காரன். மிக விரைவில் அதிக பொருள் சம்பாதிக்க வேண்டுமென்பது அவனுடைய

எண்ணம். ஆகையால் அவன் தன் வர்த்தகத்தை முறை தவறாக நடத்திவந்தான்.

4. அவனுடைய கடையிலிருந்த படி, தராசு, படிக்கல் முதலியவை சரியான அளவுள்ளவைகளல்ல. இவ்விதமாய் அவன் கள்ள அளவைகளை வைத்துக்கொண்டு மக்களை ஏமாற்றி ஏராளமான பணம் சம்பாதித்தான். அவனுக்கு ஆமட் என்னும் பெயருள்ள ஒரு குமாரன் இருந்தான்.

5. ஆமெட் சிறுவயது முதல் நற்குணமுடையவனாய் விளங்கினான். அவன் பொய் சொல்லான்; பிறர் பொருளை விரும்பான்; நீதிநெறியினின்றும் தவறான். அவன் எல்லா விஷயங்களிலும் நேர்மையாகவே நடந்து வந்தான். அனைவரும் அவனை நீதிமான் என்று புகழ்ந்து கொண்டாடினார்கள்.

6. ஆமட் குணங்களை யறிந்த சுல்தான் அவனை வரவழைத்து, தன்னிடத்தில் ஓர் உத்தியோகத்தில் அமர்த்திக் கொண்டான். கடை வீதிக்குச் சென்று வியாபாரிகள் வைத்திருக்கும் படிகள், தராசுகள் முதலியவை சரியாக இருக்கின்றனவா என்று சோதனை செய்வது அவன் வேலை. அவன் நான்கு சேவகர்களை அழைத்துக்கொண்டு குதிரை மேலேறிச்சென்று தினந்தோறும் அப் பட்டணத்திலுள்ள கடைகளைச் சோதனை செய்வது வழக்கம்.

7. ஒரு நாள் அவன் தன் தகப்பனாருடைய கடையைச் சோதனை செய்வதற்காக அங்குச் சென்றான். தூரத்தில் தன் மகன் வருவதைக் கண்ட தகப்பன், சிறிதும் அஞ்சாது, தன் மகன் தன்னுடைய திருட்டுத்தனத்தை வெளிப்படுத்த மாட்டானென்று எண்ணிக் கடைவாயிலில் தைரியமாய் நின்று கொண்டிருந்தான்.

8. ஆமெட் கடையின் வாயிலுக்குச் சென்று குதிரையை விட்டு இறங்கிச் சோதனை செய்யத் தொடங்கினான். மகம்மதுகான் தன்னுடைய மகனே சோதனை செய்யும் உத்தியோகஸ்தன் என்று எண்ணித் தான் வைத்திருந்த அளவைகளை மறைக்கவில்லை.




9. ஆமெட் அவைகளைச் சோதனை செய்து அவைகள் கள்ள அளவுள்ளவைகளென்று தெரிந்துகொண்டான். உடனே அவன் தன் தகப்பனுக்கு விலங்கிட்டு நியாயாதிபதியிடம் கொண்டுபோகுமாறு சேவகர்களுக்கு உத்தரவு செய்

தான். அவ்வண்ணமே அவர்கள் அவனை நீதிபதியிடம் அழைத்துச் சென்றார்கள்.

10. மறுநாள் விசாரணை நடந்தது; ஆமெட் நியாயஸ் தலத்துக்குச் சென்றான். அங்குத் தன் தகப்பனைக் கண்ட வுடன் அவன் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, "தந்தை



யீர், நான் நமது சுல்தானுக்கும், தேசத்துக்கும், எனக்கும், கடவுளுக்கும் சம்மதமாகுமாறு என் கடமையைச் செய் தேன். செல்வரென்றும், வறியரென்றும் தாய் தந்தைய ரென்றும், மற்ற உறவினரென்றும், கருதி நியாய முறை தவறி நடத்தல் ஏற்றதன்று. ஆகையால் நான் என் கட

மையை நடுநிலை குன்றாது நிறைவேற்றினேன். என்னை மன்னிக்கவேண்டு'' மென்று பிரார்த்தித்தான். தகப்பன் தான் செய்த இழிவான செயலை நினைந்து நினைந்து கண்ணீர் விட்டு அழுதான்.

11. நீதிபதி அவனுக்கு இருபது பவுன் அபராதமும், உள்ளங் காலில் இருபது அடியும் தண்டனையாக விதித்தார். உடனே அவன் அபராதத் தொகையைச் செலுத்தி விட்டான். சேவகர்கள் அவனைத் தரையில் படுக்க வைத்து உள்ளங் காலில் சாட்டையினால் இருபதடி அடித்தார்கள்.

12. மறுநாள் சுல்தான் இதை அறிந்து, ஆமெட்டினுடைய நேர்மையை மெச்சி அவனுக்கு நியாயாதிபதி உத்தியோகம் கொடுத்தார். மகம்மது கானும் அது முதல் தன் வர்த்தகத்தை நியாயமாய் நடத்தி வந்தான்; தன் குமாரன் உயர்ந்த உத்தியோகம் அடைந்ததைக் குறித்து பெருமகிழ்ச்சி அடைந்தான்.

---

## 11. கீரிப்பிள்ளையைக் கொன்ற கதை
### (பாட்டு)

கௌடதேச மன்னவனுக்குப் புரோகிதனாய் அமர்ந்திருந்த தேவசன்மா என்னும் ஓர் பிராமணன் தனக்குப் பிள்ளை இல்லாமையால் ஒரு கீரிப்பிள்ளையை வளர்த்து வந்தான். பின்பு, கடவுளருளால், அவன் மனைவி ஒரு ஆண் மகவைப் பெற்றாள். பிராமணனும் அவன் மனைவியும் தாம் பெற்ற பிள்ளையோடு கீரிப்பிள்ளையையும் அன்போடு போற்றி வளர்த்து வந்தார்கள். ஒரு நாள் பார்ப்பனி தன் கணவனை வீட்டில் வைத்துவிட்டு நீராடுவதற்கு ஓர் குளத்திற்குச் சென்றாள்.

ஆயிழை போகையாலே ஆரணம் முழுதும் வல்லோன்
சேயினைக் காத்திருந்தான் ; சிரார்த்தமென் றரசன் தூதர்
நீ அவண் வருக என்றார்; நேரமும் சென்று போனல்
போய்அதை யெல்லாம் வேறு புரோகிதர் கொண்டு போவார். 1.

என்றுதன் மனத்தில் எண்ணி இன்பமா வளர்த்த கீரி
தன்துணை யாகஅந்தத் தனயனை வைத்து நீங்கிச்
சென்றனன்; அரசன் வீட்டில் சிரார்த்தமும் முடித்துப் பெற்ற
பொன்துகில் அரிசி யெல்லாம் பொதிகளில் ஏற்றிக்கொண்டே. 2.

வருமுனே சேயைக் கிட்டி வந்த(து) ஓர் நாகம்; அந்தக்
கரியநா கத்தைக் கீரி கடித்திரு துண்டமாக்கிக்
குருதிவாய் எங்குமாகக் கொண்டு சந்தோஷம் காட்ட
அருமறையோன் முன் சென்ற(து); ஆ! கெடுத்தாயோ என்றே 3.

தண்டினல் அடித்துக் கொன்றான்; தளர்வொடுவீட்டில் வந்தான்;
கண்டனன் பிள்ளை முன்னே; கரிய பாம்போ இரண்டு
துண்டமாக் கடிக்கப் பட்டுத் தூரவே கிடக்கக் கண்டான்;
மண்டிய துயரமாகி வயிற்றினில் அடித்துக் கொண்டான். 4.

வாயிலும் அடித்துக்கொண்டான்; மண்ணையும் போட்டுக்கொண்
[டான்;
சேயிலும் அதிகமான சேயைநான் கொன்றேன் என்றான்;
நீ எனக்(கு) எதிரே வந்து நின்(று) எனைக் கெடுத்தாய் என்று
போய் அதன் மேல் விழுந்து புரண்டுருண் டாற்றினனே 5.

தேவியும் மூழ்கி வந்தாள்; தேவசன் மாவை நோக்கிப்
பாவி இங்(கு) ஏது கீரிப் பாலகன் இறந்த(து) என்றே
ஓ! என அலறி நின்றாள்; உற்றவா(று) அவனும் சொன்னான்;
காவியங் கண்ணி தானும் கனலிடு மெழுகொத் தாளே. 6.

—பஞ்சதந்திரம்

---

## 12. புலி

1. காட்டில் வாழும் மிருகங்களில் புலி மிக்க மூர்க்க குணமுடையது. அது பூனையின் இனத்தைச் சேர்ந்தது; ஏறக்குறைய எல்லா விஷயங்களிலும் பூனையை ஒத்திருக்கின்றது. ஆகையால் அதை மிகப் பெரிய ஒரு காட்டுப்பூனை என்று சொல்லலாம். ஆயினும் பூனையை விட அதற்குப் பெரிய உடலும் அதிக பலமும் மிகுந்த கோபமும் உண்டு.



2. புலி ஆசியா கண்டத்தின் உஷ்ண பாகங்களில் வசிக்கிறது; நமது இந்தியாவில் வங்காளத்திலும் மலையாளத்திலும் ஏராளமாகச் சஞ்சரிக்கிறது. சீன தேசத்திலும் புலிகள் உண்டு.

3. புலிகளில் இரண்டு வகையுண்டு. அவற்றுள் ஒன்றுக்கு வேங்கை என்றும் மற்றொன்றுக்குச் சிறுத்தை என்றும் பெயர். வேங்கை சிறுத்தையைவிடப் பெரியது. அது பார்வைக்கு மிகவும் அழகாயிருக்கும். பலத்திலும் மூர்க்க குணத்திலும் அதை மிருகேந்திரனாகிய சிங்கத்துக்கு அடுத்தபடியாகச் சொல்லலாம்.

4. வேங்கைப்புலி சுமார் நான்கடி உயரமும் எட்டடி நீளமும் உடையது. அது மஞ்சள் நிறமுடையதாக இருக்கும். அதன் உடல் முழுதும் அநேக கறுத்த கோணலான வரிகள் உண்டு. ஆகையால் அதற்கு கோடுவரி என்றும் ஒரு பெயர் வழங்கிவருகிறது. அதன் தலை பெரியதாயும், சிறிது உருண்டை வடிவமாயும் இருக்கும்; கண்கள் மிக்க பிரகாசமானவை; பகற்காலத்தில் கருவிழி ஒரு கோடுபோலத் தோன்றும்; இராக்காலத்தில் புலிக்குக் கண்கள் நன்றாய்த் தெரியும். காதுகள் தலையின் இருபுறத்திலும் அமைந்திருக்கும்; அவை ஒன்றுக்கொன்று தூரமாயும் வட்டமாயும் இருக்கும்.

5. புலியின் வாய் விசாலமாகவும் பார்வைக்குப் பயங்கரமாகவும் இருக்கும். பற்கள் இரண்டு வரிசையாய் அமைந்து மிகக் கூர்மையாயும் உறுதியாயுமிருக்கும். அவற்றால் புலி மாமிசத்தைக் கடித்துக் கிழித்துத் தின்னும். அதன் நாக்கு நீளமும் சொரசொரப்பு முள்ளது. அதனால் புலி எலும்பிலுள்ள மாமிசத்தைச் சிறிதும் விடாது நக்கித் தின்றுவிடும்.

6. புலிக்குக் கழுத்தின் பின்புறத்தில் சிங்கத்திற்கிருப்பதுபோலப் பிடரி மயிர் கிடையாது. ஆயினும் அதன் முகத்தில் நீண்ட மீசை மயிர் உண்டு. அவற்றின் உதவியால் அது செடிகள் அடர்ந்திருக்கும் காட்டிலும் வழியைக் கண்டு பிடித்துக்கொள்ளும். அதன் உடலில் மென்மையான மயிர் அடர்ந்திருக்கும்; அடிவயிறு வெண்மையாய் இருக்கும். அதன் வால் சுமார் நான்கடி நீள முடையது.

7. புலியின் கால்கள் குட்டையாயும் மிக்க பல முடையவையாயும் இருக்கும். அதன் பாதத்தில் நீண்டு வளைந்த கூர்மையான நகங்கள் உண்டு. பூனையைப் போலவே புலியும்

வேண்டும்போது அவற்றை நீட்டவும் சுருக்கவும் கூடும். அது நடக்கும்போது நகங்களை உள்ளே இழுத்துக் கொள்ளுகிறது; ஆகையால் ஓசை உண்டாவதில்லை. எந்தப் பிராணியையாவது அடித்துக் கொல்ல முயற்சிக்கும்போது அது நகங்களை நீட்டி அவற்ருல் அப் பிராணியைப் பீறிக் கொல்லும். புலி மாமிச பக்ஷணி; மற்ற பிராணிகளைக் கொன்று தின்னும் இயல்புடையது. அது புல் பூண்டு முதலியவற்றைத் தின்பதில்லை. இக்காரணத்தினுல் "புலி பசித்தாலும் புல்லைத் தின்னது" என்று ஒரு பழமொழியும் வழங்கிவருகிறது. மான், மரை, ஆடு, மாடு முதலியவைகளின் மாமிசத்தில் புலிக்கு மிக விருப்பம். புலி வெயில் வேளையில் செடிகளடர்ந்த புதரில் படுத்துறங்கும்; பொழுது போகும் வேளையில் அது இரைதேடப் புறப்படும். இராக்காலத்தில் இரைதேடி வெகுதூரம் செல்வதும் உண்டு.

8. தண்ணீர் குடிக்க வரும் மிருகங்களைக் கொன்று தின்னும் பொருட்டு அது நீர் நிலைகளுக்குச் சமீபத்தில் பதுங்கியிருக்கும். மிருகங்கள் தண்ணீர் குடிக்கும்போது, பூனை எலியின்மேல் பாய்வதுபோலப் பாய்ந்து அவற்றை ஒரே அறையாய் அறைந்து கொல்லும். சிங்கத்தைப்போலத் தான் கொன்ற பிராணியை அந்த இடத்திலேயே புசிக்காது; மறைவான இடத்துக்கு எடுத்துக்கொண்டு போய் வயிருர உண்ணும். மீந்த மாமிசத்தை அங்கேயே போட்டு விட்டுப் போய் மீண்டும் பசியுண்டாகும்போது வந்து அந்த மாமிசத்தைப் புசிக்கும். அது மாடு முதலிய பெரிய மிருகத்தையும் தன் வாயால் கௌவி, எளிதாய்த் தூக்கிக்கொண்டு செல்லும்.

9. சிங்கத்தினிடத்தில் இருக்கும் உயர்ந்த குணங்கள் புலிக்கு இல்லை. அது மனிதரைக் கண்டவுடனே எதிர்க்

காது; பெரும்பாலும் பயந்து ஓட எத்தனிக்கும். ஆயினும் மனிதர் அதற்குக் கெடுதி செய்தாலும் அல்லது ஓட வொட்டாமல் தடுத்தாலும் அது மிகக் கோபங்கொண்டு எதிர்த்துப் போர் புரியும்; தன்னை எதிர்த்த மனிதனைக் கொல்லும் வரையில் பின் வாங்காது. பதுங்கியிருந்து பகைவர்மீது பாய்ந்து கொல்வதில் புலிக்கு நிகரான மிருகம் வேறொன்றுமில்லை. புலி சில சமயங்களில் மனிதரையும் கொன்று தின்பதுண்டு. ஒரு முறை மனிதருடைய மாமிசத்தைத்தின்று உருசி கண்டுவிட்டால், பிறகு அது மனிதரையே கொன்று தின்ன விரும்பும்; மிருகங்களின் மாமிசத்தில் அது இச்சை கொள்ளாது. நமது தேசத்தில் வருடந்தோறும் அநேக ஜனங்கள் புலிகளால் மரணமடைகின்றார்கள். ஆகையால் மனிதர் அதை வேட்டையாடிக் கொல்லுகிறார்கள். புலியைக் கொல்லுகிறவர்களுக்கு நமது அரசாங்கத்தார் பரிசில் அளித்து உற்சாகப் படுத்துகிறார்கள். புலியை வேட்டையாடுகிறவர்கள் யானையின்மேல் ஏறிக்கொண்டு, துப்பாக்கியால் அதனைச் சுட்டுக் கொல்லுவதுண்டு. ஆயினும் புலிவேட்டை மிகவும் அபாயகரமானது.

10. புலிக்கும் பூனைக்கும் சில விஷயங்களில் வேறுபாடுண்டு. புலி மாமிசத்தை மட்டும் உணவாகக் கொள்ளும்; பூனைக்குப் பால், சோறு முதலிய வேறு பொருள்களும் உணவாகும். புலி மரங்களில் ஏறமுடியாது; பூனை மரங்களில் ஏறும். புலி சிறிதும் பயமின்றி நீரில் இறங்கும்; பூனை நீரில் ஒருபோதும் இறங்காது. புலி மிகவும் துஷ்ட மிருகம்; அது ஆடு மாடு முதலியவற்றைப்போல் மனிதருக்கு உபயோகப்படுவதில்லை. எனினும் சிலர் அதைப் பிடித்துப் பழக்கி, பலவிதமான ஆட்டங்கள் ஆடச்செய்து பணம் சம்பாதிக்

கிறார்கள். ஆயினும் புலியுடன் பழகுதல் ஆபத்துக்கிடமானது, அதன் தோலை ஆசனமாக உபயோகிக்கிறார்கள். அதன் நகங்களுக்குப் பொன் கட்டி ஆபரணமாக அணிவதுண்டு.

---

## 13. துறவியான அரச குமாரர்

1. இந்தியாவுக்கு வடக்கெல்லையாக இமயமலை என்னும் ஒரு பெரிய மலை இருக்கிறது. அதன் அடிவாரத்தில் சாக்கிய நாடு என்று பெயருள்ள ஒரு நாடு இருக்கிறது. அதன் தலைநகருக்குக் கபிலவஸ்து என்று பெயர். அங்குச் சுத்தோதனர் என்று பெயருள்ள ஒரு அரசர் அரசுசெலுத்தி வந்தார். அவருடைய மனைவிக்கு மாயாதேவி என்று பெயர்.

2. அவர்களுக்கு எல்லாவிதமான செல்வங்களும் நிறைந்திருந்தன. ஆயினும் புத்திர பாக்கியம் ஒன்று மட்டும் இல்லை. ஆகையால் அவர்கள் மனம் மிக வருந்தியிருந்தனர். நெடுங்காலம் சென்றபின் அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. குழந்தை பிறந்த ஏழாம்நாள் தாயாகிய மாயாதேவி இறந்தனள்.

3. சுத்தோதனர் அக்குழந்தைக்குச் சித்தார்த்தர் என்று பெயரிட்டு மிக்க அன்புடன் வளர்த்து வந்தார். சிறு வயது முதல் சித்தார்த்தர் எல்லா விதமான சுகங்களையும் அனுபவித்துக் கொண்டு இன்பமாய் வாழ்ந்து வந்தார். கஷ்டம் என்பது அவருக்குத் தெரியாது.

4. தக்க பருவம் வந்தவுடன் சுத்தோதனர் அவரை இளவரசராக நியமித்து யசோதரை என்னும் கன்னிகையை அவருக்கு மணம் செய்துவைத்தார். சித்தார்த்தரும் அவர் மனைவியும் மனமொத்து இன்பமாய் வாழ்ந்துவந்தனர். அவர்களுக்கு ஒரு ஆண்மகவும் பிறந்தது.

5. சித்தார்த்தர் இயல்பாகவே எல்லாப் பிராணிகளிடத்திலும் அன்புடையவர்; அவை துன்பப்படக் கண்டால் அவர் மனம் பதைப்பார்; அவை மகிழ்ந்திருப்பதைக் கண்டால் ஆனந்த மடைவார். இவ்விதமான சிறந்த குணம் அவரிடத்தில் இளம்பருவத்திலேயே உண்டாகி நாளுக்கு நாள்




வளர்ந்து வந்தது. ஆகையால் அவர் எந்தப் பிராணிக்கும் எவ்விதத் துன்பமும் செய்வதில்லை. குதிரைமேல் ஏறிச் சவாரி செய்வது குதிரைக்குத் துன்பத்தைக் கொடுக்குமென்று எண்ணி அவர் கால்நடையாகச் செல்வார்.

6. சித்தார்த்தருக்குச் சிறு வயதிலேயே சுத்தோதனர் சகல சாஸ்திரங்களையும் கற்பித்திருந்தார். சித்தார்த்தருக்கு உலக இன்பங்களில் வெறுப்பு உண்டாயிற்று. ஒருநாள் அவர் வீதிவழியாய்ப் போகும்போது ஒரு குஷ்டரோகி பிச்சை வாங்கிக்கொண்டிருப்பதைக் கண்டார். மற்றொருநாள், வயதுசென்ற கிழவன் ஒருவன் மிகத் தளர்ந்து வருந்தி நடத்தலைக் கண்டார். இன்னொரு நாள், சிலர் பிணமொன்றைச் சுடுகாட்டிற்குக் கொண்டுபோவதைப் பார்த்தார்.

7. இவ்விதமான காட்சிகள் அவருக்கு மிக்க துன்பத்தை உண்டாக்கின. ஆகையால், அவர் உலகம் துன்பம் நிறைந்ததென்று முடிவு செய்தார். துன்பத்தை நீக்கி இன்பத்தை அடைவதெப்படி என்ற விசாரம் அவருக்கு உண்டாயிற்று. வேறு எந்த விஷயத்திலும் அவருக்கு மனம் செல்லவில்லை.

8. ஆகையால் அவர் தன் அரசாட்சியையும் மனைவியையும் துறந்து காட்டிற்குச் சென்றார்; கடுமையான தவம் செய்தார்; துன்பத்தை நீக்கப் பல வழிகளை ஆராய்ந்து பார்த்தார். ஒன்றும் தோன்றவில்லை. கடைசியில் அவர் உருவேலங்காட்டில் ஒரு அரசமரத்தின்கீழ் உட்கார்ந்துகொண்டு இருபத்தெட்டுநாள் ஊண் உறக்கம் இன்றி துக்க நிவாரணத்திற்குரிய வழி யாதெனச் சிந்திக்கலானார்.

9. இருபத்தொன்பதாம்நாள் அவருக்கு ஞானம் உண்டாயிற்று. பொருள்களின் மேலுள்ள விருப்பமே துன்பத்துக்குக் காரணமென்று அவர் அறிந்தார். இச்சையை நீக்கினால் துன்பத்தை நீக்கலாம் என்று அவர் உறுதி செய்துகொண்டார்; எல்லாரையும் சகோதரரைப்போல் பாவித்து நேசிக்க

வேண்டுமென்றும் ஒரு பிராணிக்கும் இம்சை செய்யக்கூடா தென்றும் தீர்மானித்தார். இந்த உண்மைகளைக் கைக்கொண் டால் மோட்சத்தை அடையலாமென்பது அவருடைய கொள்கை.

10. ஆகையால் அவர் ஒரு புதிய மதத்தை ஏற்படுத்தி னார். மேற்சொன்ன உண்மைகளே அந்த மதத்தின் முக்கிய மான கொள்கைகள். அதன்பின் அவருக்குப் புத்தர் என்று பெயருண்டாயிற்று. புத்தர் என்றால் புத்திமான் என்பது பொருள். புத்தர் ஏற்படுத்திய மதமும் பௌத்த மதம் என வழங்கலாயிற்று. அநேக அரசர்களும் பிரபுக்களும் அவரு டைய புதிய மதத்தில் சேர்ந்தார்கள். அரசாள வேண்டிய அவர், அதை வேண்டாமென்று தள்ளிவிட்டு, இவ்விதமாய்த் துறவியானார். பௌத்த மதம் பல தேசங்களில் பரவி இன் றைக்கும் விளங்குகின்றது. புத்த மதத்தைச் சேர்ந்தவர்கள் பௌத்தர்கள் என்று சொல்லப்படுவார்கள். பௌத்தர்கள் புத்தரைக் கடவுளின் அவதாரம் என்பார்கள்.

---

## 14. காப்பிச் செடி

1. நம்மில் அநேகர் தினந்தோறும் உபயோகிக்கும் பானங்களில் காப்பி ஒன்று. காப்பிக் கஷாயம் காப்பிக்கொட் டையிலிருந்து தயாரிக்கப்படுகின்றது. காப்பிக்கொட்டை காப் பிச் செடியிலிருந்து கிடைக்கிறது.

2. காப்பிச் செடியைப் பயிரிடுகிறவர்கள் நிலத்தை முதலில் நன்றாய்ப் பண்படுத்துவார்கள். பிறகு அதில் பாத்தி கட்டிக் காப்பிக் கொட்டையை விதைத்து, வெயில் படாத படி மூடி நீர் பாய்ச்சி வருவார்கள். விதைகள் முளைத்து ஒரு அடி உயரம் வளர்ந்தபின் நாற்றுகளைப் பெயர்த்து ஏறக்

குறைய எட்டடிக்கு ஒவ்வொன்ருக வரிசையாய் நடுவார்கள். காப்பிச் செடிகளின் வளர்ச்சியும் அவை தரும் பலனும் நிலத்தின் தன்மைக்குத் தக்கவாறு இருக்கும். ஆதலால், செடிகளை நட்ட பிறகு நல்ல எருவிட்டு நீர் பாய்ச்சிக் கவனமாய்ப் பாதுகாத்து வரவேண்டும். செடியை அதன் இயற்கையாக வளரவிட்டால் அது சுமார் இருபதடி வரையிலும் வளரும்; ஆனல்



நன்ருய்க் காய்க்காது. ஆகையால், பயிரிடுகிறவர்கள் அது ஏறக்குறைய நான்கடி உயரம் வளர்ந்தவுடன் அதன் நுனியைக் கத்தரித்து விடுவார்கள். அப்படிச் செய்வதால் மேல் நோக்கி வளராமல், பக்கங்களில் கிளைவிட்டு ஒரு புதர் போலப் பரந்து வளரும். அப்பொழுதுதான் செடி நன்ருய்க் காய்க்கும்; பழங்களையும் எளிதாய்ப் பறிக்கலாம்.

3. காப்பிச் செடியின் இலைகள் நீளமாயும், சாம்பல் நிறமாயும் இருக்கும். பூக்கள் மல்லிகைமலரைப் போன்று

வெண்ணிற முடையவையாய் இருக்கும். சித்திரை, வைகாசி மாதங்களில் காப்பிச் செடி பூக்கத் தொடங்கும். இரண்டு மூன்று நாட்களில் பூக்கள் உதிர்ந்து பிஞ்சுகள் உண்டாகும். பிஞ்சுகள் வரவரப் பருத்துக் காய்களாகிப் பழுக்கின்றன. ஒவ்வொரு பழத்திலும் இரண்டு கொட்டைகள் உண்டு. காப்பிப் பழம் ஏறக்குறைய வேப்பம் பழத்தைப் போன்றது. ஆனால் அதைப்போல மஞ்சள் நிறமுடையதன்று; சிவப்பு நிறமுடையதா யிருக்கும்.

4. பழத்தின் மேலேயுள்ள தோல் சுருங்கத் தொடங்கும் காலம்தான் அதைப் பறிக்க ஏற்றகாலம். அப்பொழுது பழங்களைப் பறித்து ஒருவகை யந்திரத்தினால் கொட்டைகளை வேறு பிரிப்பார்கள். பிறகு கொட்டைகளை வெயிலில் உலர்த்திக் கோணிப்பைகளில் போட்டுத் தைத்து விற்பனைக்காக வெளி நாடுகளுக்கு அனுப்புவார்கள். காப்பிக்கொட்டை ஒருபுறம் உருண்டையாயும் மறுபுறம் தட்டையாயுமிருக்கும். காப்பிக்கொட்டை வெண்மை கலந்த பசுமை நிறம் உடையது.

5. காப்பிச்செடி பல வருஷங்கள் பலன் தரும். அது முதல் இரண்டாண்டுகளில் நன்றாய்க் காய்ப்பதில்லை. மூன்றுவது ஆண்டு முதல் நன்றாய்க் காய்க்க ஆரம்பிக்கும். காப்பிப் பழங்களை வருஷத்திற்கு மூன்று முறை பறிப்பார்கள். காப்பிச் செடி ஏறக்குறைய முப்பது ஆண்டுகள் வரையில் காய்த்துக்கொண்டிருக்கும். காப்பிக் கொட்டைகள் எல்லாம் ஒரே விதமான சுவையுடையவை அல்ல. மண்ணின் தன்மையாலும் பயிரிடும் முறையினாலும் அவற்றின் சுவை சிறிது சிறிது வேறுபடுகின்றது.

6. காப்பி தயாரிக்கவேண்டுமாயின் முதலில் காப்பிக் கொட்டையை வறுக்கவேண்டும். வறுக்கும்போது நல்ல

மணமுண்டாகும்; கொட்டையின் நிறம் மாறுபடும். அப்போது அதை எடுத்துப் பொடிசெய்து அதனின்றும் கஷாயம் இறக்கவேண்டும். இக்கஷாயத்துக்கு ஆங்கிலத்தில் 'டிகாக்ஷன்' என்று பெயர். பின்னர், இக்கஷாயத்துடன் பாலும் சர்க்கரையும் சேர்த்தால் அது பருகுவதற்கினிய பானமாகும். காப்பி களைப்பைப் போக்கி உடம்புக்கு ஒருவிதமான உற்சாகத்தைத் தருகிறது. ஆயினும், அது நமது உடல் நலத்திற்கும் வளர்ச்சிக்கும் அவசியமானதன்று. காப்பி பருகும் வழக்கம் ஏற்பட்டுவிட்டால் அவ்வழக்கத்தை நீக்குவது எளிதன்று.

7. காப்பிச்செடி முதன் முதலில் அரேபியாவிலிருந்து நமது இந்திய நாட்டுக்குக் கொண்டுவரப்பட்டது. அதற்கு முன் நமது தேசத்தில் அச்செடி இல்லை. இப்பொழுது நமது நாட்டில் மைசூர், நீலகிரி, குடகு, சேர்வராயன் மலை, பழனிமலை, குற்றாலம் முதலிய இடங்களிலும் இலங்கையிலும் காப்பிச் செடியைப் பயிரிடுகிறார்கள். அந்த இடங்களில் உள்ள காப்பித் தோட்டங்களில் ஆயிரக்கணக்கான மக்கள் கூலிக்கு வேலை செய்து பிழைக்கிறார்கள். அரேபியாவிலுள்ள மேக்கா நகரத்தில் பயிரிடப்படும் காப்பியே மிகச் சிறந்தது.

---

## 15. சிவாஜி மன்னர்

1. நமது இந்தியாவின் மேற்குப் பாகத்தில் பம்பாய் இராஜதானி இருக்கிறது. அங்கு, சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே ஒரு சாதியார் மிக்க கீர்த்தி பெற்றிருந்தார்கள். அவர்களுக்கு மகராஷ்டிரர் எனப் பெயர். அவர்கள் இராச்சியம் மகராட்டிய இராச்சியம் எனப்படும். அந்த இராச்சியத்தை நிறுவியவர்தான் சிவாஜி.

2. அக் காலத்தில் தக்கணத்திலிருந்த பிஜப்பூரில் ஒரு சுல்தான் அரசுசெலுத்தி வந்தான். அவனிடத்தில் ஷாஜி என்னும் மகராட்டிரர் ஒருவர் சேனாதிபதி உத்தியோகத்தில் அமர்ந்திருந்தார். ஷாஜியின் மனைவி ஜீஜாபாய் என்



பவள். அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. ஷாஜி அது சிவனருளால் பிறந்த குழந்தை யென்று எண்ணி அதற்குச் சிவாஜி என்று பெயரிட்டார்.

3. தாய் தந்தையர்கள் அருமையாய்ப் பிறந்த அக் குழந்தையை மிக்க அன்புடன் வளர்த்து வந்தார்கள். சிவாஜி பிறந்து சில வருஷங்கள் ஆவதற்குள் ஷாஜி, கர்நாடகத் தேசத்துக்குச் செல்லவேண்டி யிருந்தது. ஆகையால் அவர் சிவாஜியைத் தாதாஜி என்று பெயருள்ள ஒரு பிராமணரிடத்தில் ஒப்பித்தார். தாதாஜி மிக்க புத்திசாலி; ஜீவகாருண்யம் பெரிதும் உடையவர். அவர் சிவாஜியைத் தமது குமாரர் போல் நினைத்து அவருக்கு வேண்டிய கல்வியை மிக்க ஊக்கத்தோடு கற்பித்து வந்தார்.

4. சிறு வயதிலேயே சிவாஜி மிக்க பலமுடையவராய் விளங்கினர். அவருக்கு அகன்ற மார்பும், நீண்ட கைகளும், உயர்ந்த தோள்களும், பரந்த முகமும் உண்டு. கண்டோர் அனைவரையும் வசீகரிக்கும் தன்மை அப்போதே அவரிடத்தில் அமைந்திருந்தது. தேசாபிமானம் அவரிடத்தில் நிரம்ப இருந்தது. முற்காலத்திலிருந்த இராமர், பீமன், அர்ச்சுனன் முதலிய வீரர்களுடைய சரித்திரங்களைக் கேட்பதில் அவருக்கு மிக்க விருப்பம். அவற்றைக் கேட்டு அவர்களைப் போலவே தாமும் சிறந்த வீரராகவேண்டும் என்று விரும்புவார். தாதாஜி அவருடைய மன நிலையை அறிந்துகொண்டு, அதற்குத் தக்கவாறு கல்வி கற்பித்து வந்தார்; சிவாஜியுடன் அவரோடொத்த வயதுள்ள சிறுவர் பலரைச் சேர்த்துக் கொண்டு அவர்களுக்குக் குதிரை யேற்றமும், வில் வாள் முதலிய படைக்கலப் பயிற்சியும் கற்றுக்கொடுத்தார்.

5. சிவாஜியினுடைய தாயும் அவரிடத்தில் அன்பு பாராட்டி, அவருக்குப் பலவிதமான நற்போதனைகளைப் போதித்து வந்தாள். இராமாயணம், மகாபாரதம் முதலிய காவியங்களிலுள்ள பல நீதிகளைக் கதாரூபமாகச் சொல்லுவாள்.

தெய்வபக்தி உண்டாகும்படி அவரை அடிக்கடி கோயில் களுக்கு அழைத்துக்கொண்டு போவாள். சிவாஜி குடும்பத் துக்குப் பவானி தேவதையே குலதெய்வம். ஆகையால் சிவாஜி சிறு வயது முதல் மிக்க பக்தியோடு அந்தத் தேவ தையை வணங்கி வந்தார்.

6. இங்ஙனம் அவர் வளர்ந்து வரும்போது, அவரி டத்தில் சுவாதீன இச்சை உண்டாயிற்று. தமது தந்தை யைப் போலப் பீஜப்பூர் சுல்தானிடத்தில் உத்தியோகம் பெறுவதில் அவருக்கு இஷ்டமில்லை. தமது தேசத்திலும் இந்து மதத்திலும் அவருக்கு மிக்க பற்றுதல் உண்டு. டெல்லியிலிருந்த மகம்மதிய சக்கரவர்த்தியும், பீஜப்பூரி லிருந்த சுல்தானும் மகாராஷ்டிரர்களைக் கீழ்ப்படுத்திப் பலவித மான அக்கிரமங்களைச் செய்து வந்தனர். சிவாஜி தன்னு டைய தேசத்தவர் தாழ்ந்த நிலையிலிருக்கிறார்களென்பது கண்டு அவர்களை உயர்த்தவேண்டுமென்று எண்ணினார். ஆகையால், அவர் தம்மோடொத்த வயதுள்ள சிறுவர் பல ரைச் சேர்த்து ஒரு சேனையாக்கிக் கொண்டார்.

7. இந்தச் சேனையின் உதவியைக் கொண்டு அவர் பீஜப்பூரிலுள்ள ஒரு கோட்டையைப் பிடித்தார். பிறகு அவர் சேனையைப் பலப்படுத்திக்கொண்டு இராஜகிரி என்னு மிடத்தில் ஒரு கோட்டையைக் கட்டி அங்கு வசித்து வந்தார். பின்னும் பல கோட்டைகள் அவர் கைவசப்பட்டன. மகா ராஷ்டிரர்கள் எல்லோருக்கும் தாமே தலைவரானார்.

8. சிவாஜி இவ்விதம் மகாராஷ்டிரர்களின் தலைவரான தைக் கண்டு பீஜப்பூர் சுல்தான் அச்சமுற்றான். அதனால் அவன் சிவாஜியைப் பிடித்துவரும்படித் தன் சேனாதிபதியை ஒரு சேனையோடு அனுப்பினான். சிவாஜி அவனை ஒரு சூழ்ச்சி

யினால் கொன்றுவிட்டார். பிறகு சுல்தான் மற்றொரு சேனையை அனுப்பினான். சிவாஜி அந்தச் சேனையையும் பின் வாங்கும் படிச் செய்தார்.

9. பிறகு, சிவாஜி டெல்லியில் மொகலாய சக்கரவர்த்தி அரசு செலுத்திக் கொண்டிருக்கையில் நாட்டிற் புகுந்து கொள்ளையடிக்க ஆரம்பித்தார்; அவரை அடக்க மொகலாய சக்கரவர்த்தியால் முடியவில்லை. ஆகையால் அவன் சிவாஜியோடு சமாதானம் செய்துகொண்டு, அவருடைய சிறந்த குணங்களை மெச்சுவதுபோல் பாசாங்கு செய்து தன்னுடைய நகரத்துக்கு அவரை வரவழைத்துச் சிறையில் அடைத்தான். சிவாஜி தந்திரமாய்ச் சிறைச்சாலையினின்றும் வெளிப்பட்டு ஒரு சந்நியாசி வேடம் பூண்டு, இராஜகிரியிலுள்ள கோட்டையை அடைந்தார்: மகராஷ்டிர அரசராகப் பட்டாபிஷேகம் செய்துகொண்டார். ஆயினும் சிவாஜி மன்னர் ஆறு வருஷங்கள் தான் அரசராய் இருந்தார். அவர் தமது ஐம்பத்து மூன்றாவது வயதில் காலஞ்சென்றார்.

10. சிவாஜி நமது இந்து தேச சரித்திரத்தில் பிரசித்தி பெற்ற சிறந்த வீரர்; தமது சொந்த முயற்சியாலேயே அரச பதவியை அடைந்தவர். அவர் தம் தேசத்தவர்களை உயர்த்த வேண்டுமென்று மிகவும் பாடுபட்ட பெரிய தேசாபிமானி; பகைவரிடத்தில் அன்பும் சீடர்களிடத்தில் இரக்கமும் உடையவர். சிவாஜியின் புகழ் இன்றும் அழியாமல் இருக்கிறது.

---

## 16. புலியும் பிராமணனும் நரியும்

1. ஒரு காட்டிலிருந்த புலி ஒன்று இரைதேடி அலைந்து திரிந்துகொண்டிருந்தது. அது மனிதரைத் தின்னும் புலி; அது முன்னமே பலரைக்கொன்று தின்று அச்சத்தை விளை

வித்து வந்தது. ஆகையால், அதைப் பிடித்துக் கொல்வதற்காக ஊரிலுள்ளவர்கள் ஒரு கூண்டு செய்து அதனுள்ளே அதற்கு உணவாக ஒரு மாமிசத்துண்டைக் கட்டி வைத்திருந்தார்கள். அந்தக் கூண்டின் கதவு உட்புறத்தில் திறக்கும் தன்



மையது. புலி உள்ளே போகும்போது கதவு தானே திறக்கும்; அது சென்றவுடன் படக்கென்று மூடிக்கொள்ளும். இவ்விதமான கூண்டுக்குப் போறி என்று பெயர்.

2. கூண்டில் கட்டிவைத்திருந்த ஊனைக் கண்டவுடனே புலி சரேலென்று உள்ளே புகுந்தது. அங்கிருந்த இரையை மிக ஆவலுடன் தின்றுவிட்டு வெளியே வர முயற்சி செய்

தது. கதவு மூடிக்கொண்டமையால் வெளியே வருவதற்கு முடியவில்லை.

3. புலி கதவைத் திறக்கத் தன்னால் ஆனமட்டும் முயன்றும் பயன்படாமையால் மிக்க கோபங்கொண்டு கூண்டின் கம்பிகளை உதைத்துக் கடித்துக்கொண்டிருந்தது. அச்சமயத்தில் அவ்வழியாக ஒரு பிராமணன் வந்தான். புலி வேதியனைப் பார்த்து, "ஐயா, பிராமணோத்தமரே, என்னை இந்தப் பொறியிலிருந்து விடுவித்தால் உமக்கு மிக்க புண்ணியமுண்டு; தயைசெய்து என்னைக் காப்பாற்றும்" என்றது.

4. அதைக் கேட்ட பிராமணன், "புலியே, நீயோ மனிதரைத் தின்னும் மிருகம். உன்னை விடுவித்தால் நீ உடனே என்னைக் கொன்றுவிடுவாய்; ஆகையால் உன்னை விடுவிக்க அஞ்சுகின்றேன்" என்றான்.

5. பிராமணனது அச்சத்தைக் கண்ட புலி, "ஒரு நன்றி செய்தவரை எப்பொழுதும் மறவாமல் பூசிப்பது எங்கள் சாதி வழக்கம். என்னுயிரைக் காப்பாற்றும் உம்மை நான் கொல்வேனா? நீர் சிறிதும் சந்தேகப்படாமல் கதவைத் திறந்து என்னை விடுவியும். நீர் செய்யும் நன்றியை நான் என்றும் மறவேன்" என்றது.

6. பிராமணன் மனமிரங்கிப் புலியின் வார்த்தையை நம்பி மெல்லக் கதவைத் திறந்து விட்டான். உடனே புலி வெளியே வந்து, "அடா பிராமணா, புலி மனிதரைக் கொன்று தின்பது வழக்கம்; என் சொல்லை நம்பிக் கூட்டைத் திறந்து என்னை வெளியே விட்டது உன் மூடத்தனம். ஆகையால் இதோ நான் உன்னைக் கொல்லுகிறேன்" என்று சொல்லி அவன் மேல் பாயத் தொடங்கிற்று.

7. அப்பொழுது அந்தணன் திகிலடைந்து, "ஐயா புலியாரே, கொஞ்சம் பொறும்; அவசரப்படவேண்டாம்; உம்மைக் காப்பாற்றின என்னைக் கொல்வது தருமமன்று. இதோ வருகிற நரியிடத்தில் நடந்ததைச் சொல்லி அதனுடைய தீர்மானத்தின்படி நாம் நடந்துகொள்ளலாம்" என்று கூறினான். புலியும் அதற்கு உடன்பட்டது.

8. அப்பொழுது நரி சமீபத்தில் வந்தது. பிராமணன் நடந்ததை நடந்தபடியே நரியிடத்தில் சொன்னான். நரி பிராமணன் கூறியவற்றைக் கேட்ட பின்பு, புலியைப் பார்த்துப், "பிராமணன் சொன்னதெல்லாம் உண்மைதானா?" என்று வினவிற்று. புலி "உண்மைதான்" என்றது.

9. நரி புலியைப் பார்த்து, "பிராமணன் சொன்னது எனக்கு நன்றாய் விளங்கவில்லை. கூட்டினருகே சென்றால்தான் இந்த விவகாரம் சரியாய் விளங்கும். ஆகையால் நீங்களிருவரும் அங்கு வாருங்கள்" என்றது.

10. அவ்வண்ணமே பிராமணனும் புலியும் கூண்டுக்குச் சமீபத்தில் சென்றவுடன், நரி புலியைப் பார்த்து, "பிராமணன் உன்னை விடுவிக்கும்போது நீ எங்கிருந்தாய்?" என்றது. புலி நான் கூண்டுக்குள் இருந்தேன்" என்றது. நரி பிராமணனை நோக்கி "ஓ பிராமணா, நீ எங்கே இருந்தாய்" என்றது. பிராமணன், "இந்த இடத்தில்தான் இருந்தேன்" என்று சொல்லித் தானிருந்த இடத்தைக் காண்பித்தான். பின்பு நரி புலியைப் பார்த்து, "கூண்டுக்குள் நீ இருந்த இடம் எது?" என்றது.

11. உடனே புலி கூண்டுக்குள் வேகமாய்ப் பாய்ந்தது; கதவு மூடிக்கொண்டது. அதைக் கண்ட நரி, மிக்க மகிழ்ச்சியடைந்து, "அப்படியா? மிகவும் நல்லது; நீ இங்கேயே இரு.

ஓ பிராமணா, நீ சுகமாய் வீட்டுக்குப்போ" என்றது. பிராமணன் சந்தோஷத்தோடு வீட்டுக்குச் சென்றான். புலி கூண்டில் அகப்பட்டிருப்பதைக் கிராமத்திலுள்ள ஜனங்கள் அறிந்து அதைக் கொன்றார்கள். இக்கதையினால் நீங்கள் தெரிந்துகொண்டதென்ன? துஷ்டருக்கு நாம் ஒருபோதும் உதவி செய்தல் ஆகாது.

'துஷ்டர் உறவைத் தூரத் தள்ளு.'

---

## 17. மண்ணெண்ணெய்

1. மண்ணெண்ணெய் என்பது பூமியிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் என்று பொருள்படும். இக்காலத்தில் நமது வீடுகளில் விளக்கெரிப்பதற்குப் பெரும்பாலும் இந்த எண்ணெயையே உபயோகிக்கிறார்கள். ஆகையால், இந்த எண்ணெயை அறியாதவர் ஒருவரும் இரார்.

2. எண்ணெய் என்ற பதம் எள் நெய் என்னும் இரு சொற்களால் ஆகியது. எள் என்பது ஒரு விதை; நெய் என்பது நெய்ப்புள்ள ஒரு திரவப்பொருள். ஆகவே, எண்ணெய் என்பதற்கு எள்ளினின்று உண்டாகிய நெய் என்பது பொருளாகும். தைலம் என்பதற்கும் இதுவே பொருள்; திலம் என்பது எள்; அதினின்று உண்டாகியது தைலம். முற்காலத்தில் எள்ளினின்று எடுக்கப்படும் நெய்யே எண்ணெய் அல்லது தைலம் என்னும் பெயரால் வழங்கப்பெற்றுவந்தது. பின்னர், ஆமணக்கு, தேங்காய் முதலியவற்றிலிருந்து எடுக்கப்படும் நெய்களும் எண்ணெய் என்ற பெயராலேயே வழங்கப்படலாயின. ஆயினும், எள்ளினின்று எடுக்கப்படுவது நல்லெண்ணெய் என்றும், ஆமணக்கிலிருந்து எடுக்கப்படுவது விளக்கெண்ணெய் என்றும், தேங்காயினின்று எடுக்கப்படுவது

தேங்காயெண்ணெய் என்றும் வழங்கப்பட்டு வருகின்றன. இவைகளைப்போல, மண்ணிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயும் மண்ணெண்ணெய் எனப்படுகின்றது.

3. முற்காலத்தில் ஆமணக்கு நெய்யே விளக்கெரிப்பதற்கு உபயோகப்பட்டு வந்தது. அதனால்தான் அதற்கு விளக்கெண்ணெய் எனப் பெயர் வழங்கலாயிற்று. இப்பொழுது மண்ணெண்ணெயே விளக்கெரிப்பதற்கு மிகுதியும் உபயோகப்படுகிறது. அதற்கு ஆங்கிலத்தில் "கேரோசின் ஆயில்" என்னும் பெயர் வழங்குகிறது.

4. மண்ணெண்ணெயைச் சில தேசங்களில் பூமிக்குள்ளிருந்து எடுக்கிறார்கள். பூமி அதிர்ச்சியினாலும், எரிமலைகள் பொங்கி வழிவதனாலும் காடுகள், நகரங்கள் முதலியவை அழிந்து போவதுண்டு. அப்பொழுது மரம் செடிகளெல்லாம் பூமிக்குள் புதைந்துவிடும். அவை அப்படியே நிலத்தில் நெடுங்காலம் கிடந்தால் கரியாக மாறும். அதுதான் நிலக்கரி என்று சொல்லப்படுவது. நிலக்கரி இருக்குமிடங்களில் ஒரு விதமான தைலம் ஊறும். அவ்விடங்களைக் கண்டுபிடித்துக் கிணறுகள் தோண்டினால் மண்ணெண்ணெய் அகப்படும்.

5. மண்ணெண்ணெய் விளக்கெண்ணெய் முதலியவற்றைப்போலத் தடிப்பானதன்று. அது ஏறக்குறைய தண்ணீரைப் போலவே இருக்கும். ஆயினும் அது நீரைவிட இலேசானது; தண்ணீரில் மிதக்கும் தன்மையுடையது. அதில் தீ மிக விரைவில் பற்றிவிடும்.

6. சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னேதான் இந்த எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டது. மண்ணெண்ணெய் கிடைக்கும் நிலத்துக்கு அருகிலுள்ள குளம் குட்டைகளில் இருக்கும் நீர் மண்ணெண்ணெய் சம்பந்தப்பட்ட

தாக இருக்கும். சில சமயங்களில் அந்தத் தண்ணீரில் மண்ணெண்ணெய் மிதந்துகொண்டிருக்கும். இக்குறிகளால் மண்ணெண்ணெய் அந்த இடத்தில் அகப்படும் என்று தெரிந்துகொள்ளலாம். பூமிநூல் வல்லார் மண்ணைச் சோதித்து இன்னின்ன இடத்தில் மண்ணெண்ணெய் இருக்கிறதென்று சொல்லுவார்கள். அவ்விடங்களில் பள்ளம் தோண்டியாவது பெரிய இருப்புக் குழாய்களை இறக்கியாவது கிணற்றிலிருந்து தண்ணீர் எடுப்பது போல மண்ணெண்ணெயை எடுப்பார்கள்.

7. மண்ணெண்ணெய் முதன் முதலில் வட அமெரிக்காவிலுள்ள ஐக்கிய நாட்டில் அகப்பட்டது. அதைக் கண்டு பிடித்தவுடன் அந்நாட்டார் அதனால் விளக்குகளை எரிக்கலாம் என்று அறிந்து மிக்க வியப்படைந்தனர். இப்பொழுது அது ருஷியா, பாரசீகம், பர்மா முதலிய தேசங்களிலும் மிகுதியாக எடுக்கப்படுகிறது. அவ்விடங்களில் வரிசையாய் அநேக மண்ணெண்ணெய்க் கிணறுகள் இருப்பது மிக்க வியப்பைத் தரும். அவற்றில் ஆயிரக்கணக்கான மனிதர்கள் வேலை செய்து ஜீவனம் செய்கிறார்கள்.

3. கிணறுகளிலிருந்து எடுக்கும்போது மண்ணெண்ணெயில் பலவகையான அழுக்குகள் கலந்திருக்குமாதலின் அதைச் சுத்தப்படுத்த வேண்டும். சுத்தப்படுத்தினால் தெளிவான நீரைப் போலிருக்கும். இந்தத் தூய்மையான எண்ணெயே வெளியூர்களுக்கு விற்பனைக்காக அனுப்பப்படுவது.

9. மண்ணெண்ணெய் எரிவதனால் உண்டாகும் வெளிச்சம் மிகவும் பிரகாசமுடையது. அது மிகுதியாய்ப் பல விடங்களில் அகப்படுவதனால் மற்ற எண்ணெய்களைவிட விலை குறைவாக உள்ளது. ஆதலால் அதையே உலகமெங்கும் ஜனங்கள்

விளக் கெரிப்பதற்கு உபயோகிக்கிறார்கள். சமையல் செய்வதற்கும் அந்த எண்ணெய் விறகுபோல் உபயோகப்படுகிறது. அதற்கென ஒருவிதமான அடுப்பு உண்டு. அதில் மண்ணெண்ணெயை விட்டு எரித்து அந்த அனலில் சமையல் செய்கிறார்கள். மண்ணெண்ணெயை நன்றாய்ச் சுத்தம் செய்தால் அது தூய நீரைப்போன்று இருக்கும். இவ்விதமாய்ச் சுத்தம் செய்யப்பட்ட எண்ணெய்க்குப் "பெட்ரோல்" என்று பெயர். மோட்டார் வண்டிகளையும் ஆகாய விமானங்களையும் வேறு சில யந்திரங்களையும் இயக்குவதற்குப் பெட்ரோலையே உபயோகிக்கிறார்கள். தற்காலத்தில் மக்களுக்கு மிகவும் பயன்படும் பொருள்களில் மண்ணெண்ணெய் ஒன்று.

---

## 18. ஒட்டகம்

1. மாடு குதிரை முதலிய மிருகங்களைப்போலவே ஒட்டகமும் மனிதருக்கு மிகவும் உபயோகமான மிருகம். அது பாலைவனத்தில் சஞ்சரிக்கும் இயல்புள்ளது. அது அரேபியா, ஆப்பிரிக்கா, பாரசீகம், இந்தியா முதலிய இடங்களிலுள்ள பாலைவனங்களில் காணப்படும். நமது தென்னிந்தியாவில் பெரிய கோவில்களிலும் மடங்களிலும் ஒட்டகம் யானையைப் போல அலங்காரத்தின் பொருட்டும் கௌரவத்துக்காகவும் வளர்க்கப்படுகின்றது. ஜமீன்தார்களும் சிற்றரசர்களும் ஒட்டகத்தைத் தங்கள் பரிவாரங்களில் ஒன்றாக வைத்து வளர்க்கிறார்கள்.

2. ஒட்டகம் ஒரு நெடிய மிருகம்; பார்வைக்கு விகாரமாய் இருக்கும். அது பாதம் முதல் தலை வரையில் சுமார் பத்தடி உயரமுள்ளது. அதன் தலை சிறியது; செவிகள் குறுகலானவை. அதன் கால்கள் மிக உயரமானவை; கழுத்து

மிகவும் நீண்டு மெலிந்திருக்கும்; ஆதலால், அது மரக்கிளை களிலுள்ள இலைகளைக் கடித்து இழுக்கவும் தரையிலிருக்கும் புல் பூண்டுகளைச் சுலபமாய் மேயவும் கூடும்.

3. அதன் கண்கள் சிறியவை; அவற்றின்மேல் புருவங்கள் தொங்கிக்கொண்டிருப்பதால் சூரியனுடைய வெப்பம் கண்களைத் தாக்குவதில்லை. ஒட்டகம் தன் இஷ்டப்படி மூடவும் திறக்கவும் கூடிய ஜவ்வுகள் அதன் மூக்குத் துவா



ரங்களில் அமைந்திருக்கின்றன. ஆகையால் காற்று வீசும் போது மூக்குத் துவாரத்தில் மணல் பிரவேசியாதபடி அது காத்துக்கொள்ளும்.

4. ஒட்டகத்தின் வாய் மிகவும் விசாலமானது. அதற்கு மேல் வாயில் பதினாறு பற்களும் கீழ்வாயில் பதினெட்டுப் பற்களும் உண்டு. அவை அகன்று கூர்மையாய் இருப்பதால் அது தான் உண்ணும் ஆகாரத்தை நன்றாய்க் கடித்து அரைத்

துத் தின்னும். அதன் பாதம் அகலமாயும் பிளவுபட்டுமிருக் கும். ஒவ்வொரு பிளவிலும் ஒரு குளம்பு உண்டு. அதன் உள்ளங்கால் மிக்க பலமுடையது; அது அகலவும் சுருங்க வும் கூடிய ஒருவகைத் தோலினல் ஆகியது. பாதம் அகன்று கடற் பஞ்சுபோல் மிருதுவாய் இருப்பதால், ஒட்டகம் மண லில் நடக்கும்போது கால் புதைந்து போகிறதில்லை.

5. பெரிய பாலைவனங்களில் பல நூறு மைல் தூரம் மணல் நிறைந்திருக்கும்; சூரிய வெப்பத்தால் மணல் நெருப் பைப்போல் சுடும்; சில சமயங்களில் சுழல் காற்று வீசிச் சூடான மணலை நாற்புறமும் வாரி இறைக்கும். மனிதராவது வேறு மிருகங்களாவது அந்த மணல் வெளிகளில் பிரயாணம் செய்ய முடியாது. ஆனல் ஒட்டகம் மாத்திரம் அவ்வனங் களில் யாதொரு வருத்தமுமின்றிப் பிரயாணம் செய்யும். ஏனெனில், அது பாலைவனங்களில் பிரயாணம் செய்ய ஏற்ற தாக அதன் தேக அமைப்பு மேற்கூறியபடி அமைந்துள்ளது. சமுத்திரத்தைக் கப்பல்மூலமாய்க் கடந்து செல்லுவதுபோல பாலைவனத்தைக் கடப்பதற்கு ஒட்டகம் உபயோகப்படுகிறது. அதனல் அதற்குப் "பாலைவனக் கப்பல்" எனப் பெயர் வழங்கி வருகிறது.

6. ஒட்டகத்தின் உடல் முழுதும் பழுப்பு நிறமான உரோமம் அடர்ந்திருக்கும். ஒட்டகங்களில் இரண்டுவகை யுண்டு. ஒருவகையான ஒட்டகத்திற்கு முதுகின் மத்தியில் ஒரு திமில் உண்டு. மற்றெருருவகையான ஒட்டகத்திற்கு முதுகில் முன் ஒன்றும் பின் ஒன்றுமாக இரண்டு திமில்கள் உண்டு. திமில் என்பது கொழுப்பு நிறைந்த சதையே. ஒட்டகத்தின் வால் மிகவும் குட்டையானது; அதன் நுனியில் குஞ்சம்போல் சிறிது மயிர் உண்டு. ஒட்டகம் மிகவும் அழகற்ற பிராணி

யாய்த் தோன்றினும் சுமை சுமப்பதற்கு அதைப்போல உபயோகமான மிருகம் வேறில்லை.

7. ஆடுமாடுகளைப்போல ஒட்டகமும் சாக பக்ஷிணி. அது புல், பூண்டு, இலை, தழை முதலியவற்றைத் தின்னும். ஆயினும் வேறெந்த மிருகமும் விரும்பாத வேப்பிலையைத் தின்பதில் ஒட்டகத்திற்கு மிக விருப்பம். ஒட்டகம் உண்ணும் ஆகாரம் ஜீரணமாக நெடுநேரம் ஆகும். அது ஒரு மணி நேரத்தில் உட்கொள்ளும் இரை அதற்கு ஒரு நாளைக்குப் போதுமானது. ஒட்டகம் ஒருமுறை வயிறுர உணவு கொண்டால், அவ்வுணவு அதற்கு ஐந்தாறு நாட்களுக்குப் போதுமானது. ஆதலின் சில நாட்கள் ஒட்டகம் உணவில்லாதிருப்பினும் அதற்குப் பலங்குறையாது. உணவில்லாத காலத்தில் அதன் திமிலிலுள்ள கொழுப்புக் கரைந்து அதற்குப் பலத்தைக் கொடுக்கும்.

8. அது தண்ணீரையும் பல நாட்களுக்கு வேண்டிய அளவு ஒரே முறையில் பருகக்கூடும். அதன் இரைப்பையின் ஒரு பக்கத்திலுள்ள பல அறைகளில் அது தண்ணீரை நிரப்பிக்கொள்ளும். இங்ஙனம் ஆகாரத்தையும் ஜலத்தையும் சேகரித்து வைத்துக்கொள்ளும் சக்தி அதற்கிருப்பதால் சுமார் ஒருவாரம் வரையிலும் உணவும் நீரும் இல்லாவிட்டாலும் அது சிறிதும் சோர்வடையாமல் ஒரே நடையாய் நடந்து பிரயாணம் செய்யும்.

9. ஒட்டகம் மனிதர்களையும் பாரமான சுமைகளையும் முதுகின்மேல் சுமந்து செல்வதற்கு மிகவும் ஏற்ற பிராணி. அது மிகவும் உயரமாக இருப்பதால் மனிதர் ஏறும்போதும் பாரம் ஏற்றும்போதும் தன் கால்களை மடக்கிப் படுத்துக் கொள்ளும். சில ஒட்டகங்களைச் சவாரி செய்வதற்குமாத்தி

ரம் உபயோகப்படுத்துவார்கள். பாரம் சுமக்கும் ஒட்டகம் நாள் ஒன்றுக்குச் சுமார் முப்பது மைல் வீதமும், மனிதர் ஏறிச் சவாரி செய்யும் ஒட்டகம் ஒரு நாளைக்கு ஐம்பது மைல் வீதமும் பிரயாணஞ் செய்யும். பெண் ஒட்டகம் ஒரு தடவைக்கு ஒரே குட்டி தான் போடும். குட்டி ஏறக்குறைய மூன்றடி உயரமிருக்கும். மூன்று வருஷம் வரையில் அதற்கு ஒரு வேலையும் கொடுக்கமாட்டார்கள். நான்காவது வருஷம் முதல் அதை வேலைக்குப் பழக்குவார்கள்.

10. அராபியருக்கு ஒட்டகம் மிகவும் பயன்படுகிறது. நாம் ஆடு மாடுகளை வளர்ப்பதுபோல் அவர்கள ஒட்டகத்தை வளர்க்கிறார்கள். அராபியர் பாலைவனங்களைக் கடந்து சென்று வியாபாரம் செய்வதற்கு ஒட்டகத்தையே உபயோகிக்கிறார்கள். பல அராபிய வியாபாரிகள் தத்தம் ஒட்டகங்களில் சரக்குகளை ஏற்றிக்கொண்டு கூட்டமாகப் பாலைவனங்களில் பிரயாணம் செய்வார்கள். அத்தகைய வர்த்தகக் கூட்டத்துக்குக் கேரவான் என்று பெயர். அராபியர் ஒட்டகத்தின் மாமிசத்தைப் புசிப்பார்கள். அதன் பாலை அவர்கள் மிகவும் விரும்பிப் பருகுவார்கள். அதன் மயிர் ஓவியம் எழுதும் தூரிகைக்கோல் செய்ய உதவும். அதன் உரோமத்தினால் அழகான கம்பளங்களும் செய்கிறார்கள். ஒட்டகம் ஐம்பது வருஷங்கள் வரையில் பிழைத்திருக்கும்.

---

## 19. பழமொழிகள்

1. தலையிருக்க வால் ஆடுமா?
2. கொல்லத் தெருவில் ஊசி விற்கலாமோ?
3. தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று.

4. தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால் தெரியும்.
5. தாயைப் போலப் பிள்ளை; நூலைப் போலச் சேலை.
6. தினை விதைத்தவன் தினையை அறுப்பான்; வினைவிதைத் தவன் வினையை அறுப்பான்.
7. அன்னமிட்டார் வீட்டில் கன்னமிடலாமா?
8. உரலில் அகப்பட்டது உலக்கைக்குத் தப்புமா?
9. ஏட்டுச் சுரைக்காய் கறிக்காகுமோ?
10. எறும்பு ஊரக் கல்லும் தேயும்.
11. ஆழம் அறியாமல் காலை விடாதே.
12. துள்ளின மாடு பொதி சுமக்குமா?
13. புலி பசித்தால் புல்லைத் தின்னுமா?
14. தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்.
15. இளங்கன்று பயமறியாது.
16. நொண்டிக் குதிரைக்குச் சருக்கினது சாக்கு.
17. பணம் பந்தியிலே; குலம் குப்பையிலே.
18. பன்றியோடு கூடின கன்றும் மலம் தின்னும்.
19. மழை பெய்தால் குளம் நிரம்பும்; பனி பெய்தால் குளம் நிரம்புமா?
20. நெருப்பில்லாமல் புகை உண்டாகுமோ?

---

## 20. விவேக சிந்தாமணி

ஆபத்துக் குதவாப் பிள்ளை அரும்பசிக் குதவா அன்னம்
தாபத்தைத் தீராத் தண்ணீர் தரித்திர மறியாப் பெண்டிர்
கோபத்தை அடக்கா வேந்தன் குருமொழி கொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம் பயனில்லை ஏழுந்தானே. (1)

ஒப்புடன் முகமலர்ந்து உபசரித் துண்மை பேசி
உப்பிலாக் கூழிட் டாலும் உண்பதே அமிர்த மாகும்;
முப்பழ மொடுபா லன்னம் முகங்கடுத் திடுவா ராயின்
கப்பிய பசியி னோடு கடும்பசி யாகுந் தானே. (2)
கதிர்பெறு செந்நெல் வாடக் கார்க்குலம் கண்டு சென்று
கொதிதிரைக் கடலிற் பெய்யும் கொள்கைபோற் குவலயத்தே
மதிதனம் படைத்த பேர்கள் வாடினோர் முகத்தைப் பாரார்
நிதிமிகப் படைத்தோர்க் கீவார்; நிலையிலார்க்கீய மாட்டார்.(3)
தண்டா மரையி னுடன்பிறந்துந் தண்டே னுகரா மண்டூகம்,
வண்டே கானத் திடையிருந்து வந்தே கமல மதுவுண்ணும்;
பண்டே பழகி இருந்தாலும் அறியார் புல்லோர் நல்லோரே,
கண்டே களித்தங் குறவாடித் தம்மிற் கலப்பர் கற்றோரே. (4)
புத்திமான் பலவா னவான்; பலமுளான் புத்தி யற்றால்
எத்தனை விதத்தி னாலும் மிடரது வந்தே தீரும்;
மற்றொரு சிங்கந் தன்னை வருமுயல் கூட்டிச் சென்றே
உற்றதோர் கிணற்றின் சாயல் காட்டிய வுவமை போலே. (5)

---

## 21. இளங்கோவடிகள்

1. முற்காலத்தில் தென்னிந்தியாவை மூன்று அரச மரபினர் ஆண்டு வந்தார்கள். அவர்கள் சேரர் சோழர் பாண்டியர் என்பவர்கள். சேரர் பரம்பரையில் சேரலாதன் என்னும் ஒரு அரசன் இருந்தான். அவனை நெடுஞ் சேரலாதன் என்றும் சொல்லுவதுண்டு.

2. சேரலாதன் சிறந்த வீரன்; தரும சிந்தை யுடையவன். நன்றாய்க் கல்வி கற்றவன். "கற்றாரைக் கற்றோரே காமுறுவர்" என்றபடி, கற்றுணர்ந்த பெரியாரை அன்புடன்

ஆதரிக்கும் பெருங்குணமுடையவன். அவன் வஞ்சி நகரத்தை இராசதானியாக்கிக்கொண்டு செங்கோல் செலுத்தி வந்தான்.

3. சேரலாதனுக்கு அவன் மனைவி நற்சோணை என்பவள் வயிற்றில் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். மூத்தவனுக்குச் சேங்குட்டுவன் என்றும் இளையவனுக்கு இளங்கோ என்றும் பெயர். சகோதரர் இருவரும் மிக்க ஒற்றுமையுடன் வாழ்ந்துவந்தனர். இளங்கோ தன் தமையனாகிய செங்குட்டுவனிடத்தில் மிக்க மரியாதையாய் நடந்துவந்தார்.




4. மூத்தவனாகிய செங்குட்டுவனுக்குப் போர் செய்வதில் மிகவும் விருப்பம். அவன் எந்நேரமும் போர்ப் பயிற்சி செய்துகொண்டே யிருப்பான்; போர்க்களத்தில் பகைவரை எதிர்த்து யுத்தஞ்செய்து வெற்றியடைவதே மேன்மை என்பது அவனுடைய எண்ணம். மேலும் இயல்பாகவே அவன் மிக்க வீரமும் தீரமுமுடையவன். ஆகையால், சேரலாதனும் அவனை அவ்வழியிலேயே செல்ல விட்டான்.

5. இளங்கோ இளகிய நெஞ்சுடையவர்; கல்வியினும் மேம்பட்ட செல்வம் வேறில்லை யென்பது அவர் கருத்து. "மன்னனில் கற்றோன் சிறப்புடையன்" அல்லவா? ஆகையால் அவர் கல்வி கேள்விகளில் தன் காலத்தைக் கழித்து வந்தார்; கல்வியில் தேர்ச்சிபெற்று மிகச் சிறந்த புலவரானார். ஆகையால் அரண்மனைக்கு வரும் வித்துவான்கள் அவரை மிகவும் புகழ்ந்து பாராட்டி வந்தனர். இளங்கோவும் அவர்களிடத்தில் அன்பு பூண்டு, அவர்களை ஆதரித்து வந்தார்.

6. ஒருநாள் சிறந்த சோதிடர் ஒருவர் அரச சபைக்கு வந்தார். சேரலாதனும் அவருக்குத் தக்க ஆசனம் கொடுத்து உபசரித்தான். சோதிடர் சபையிலிருந்த அரச குமாரர் இருவரையும் சிறிது நேரம் கூர்ந்து நோக்கினர்.

7. பின்பு அவர் அரசனைப் பார்த்து, "இராஜசேகரா, நீர் நெடுநாள் அரசு செலுத்திப் பெரும் புகழ் பெற்றீர்; உமக்கு ஓய்வு வேண்டும். மேலும், உமக்கு மூப்பு மேலிட்டுவிட்டது; ஆகையால் உமது குமாரரில் ஒருவனை அரசாள வைத்து நீர் தவம் செய்யச் செல்வதே முறையாகும். உமது குமாரரில் இளங்கோவே அரச பாரத்தைத் தாங்கி நடத்தத் தகுந்தவர்" என்றார். அதைக் கேட்டு அரசன் மௌனமாயிருந்து சிந்திக்கலானான். செங்குட்டுவன் மனம் மிக வருந்தினன்.

8. உடனே இளங்கோ ஆண் சிங்கம் போல் எழுந்து நின்று, சோதிடரைப் பார்த்துப் "பெரியீர், தாங்கள் சொன்னது சரியென்று எனக்குத் தோன்றவில்லை. மூத்தோன் ஒருவன் உயிரோடிருக்க இளையவன் அரசாளுதல் முறையாகுமா? அது அரச தருமத்துக்கு இயைந்த செயலா? ஆகையால், அண்ணனே மணிமுடியணிந்து செங்கோல் தாங்கி

அரசு செலுத்தட்டும்; நான் துறவறம் பூண்டு தவம் செய்வேன்" என்றார். அதுமுதல் அவர் துறவியானார். அதனால் அவருக்கு இளங்கோ அடிகள் என்று பெயர் உண்டாயிற்று.

9. அவருடைய தமையன் செங்குட்டுவன் சேர நாட்டுக்கு அரசனாகி, மிக்க கீர்த்தியோடு அரசு செலுத்தி வந்தான். இவன் காலத்தில்தான் பாண்டியன் நெடுஞ்செழியன் என்பவன் கோவலன் என்னும் வணிகனை அநியாயமாய்க் கொன்றான். கோவலன் மனைவியும் கற்பரசியுமாகிய கண்ணகியின் சாபத்தால் பாண்டியன் அரசு செலுத்தின மதுரை மாநகரம் தீப்பற்றி எரிந்தது. பாண்டியனும் அவன் மனைவியும் இறந்தனர். பிறகு கண்ணகி சேரநாட்டை யடைந்து, மேலுலகத்திலிருந்து விமானத்தில் அங்கு வந்த தன் கணவனோடு சுவர்க்கத்தை அடைந்தாள். அவர்கள் சரித்திரத்தை இளங்கோவடிகள் தமிழில் சிலப்பதிகாரம் என்னும் பெயருடைய ஒரு சிறந்த காவியமாகச் செய்தார். அதனால் அவர் பெயர் இன்றும் நிலவிவருகின்றது. நீங்கள் பெரிய வகுப்பில் படிக்கும்போது அக் காப்பியத்தைப் பற்றி நன்கு தெரிந்து கொள்வீர்கள்.

---

## 22. தென்னை மரம்

1. நமக்கு மிகுதியாகப் பயன்படுகிற மரங்களில் தென்னை மரம் ஒன்று. அது பனை, ஈஞ்சு, கமுகு முதலிய மரங்களின் இனத்தைச் சேர்ந்தது. அது விசேஷமாய் உஷ்ண தேசங்களில்தான் பயிராகின்றது. அதன் அடிமரம் தூண்போல நீளமாக வளரும். அது நாற்பது முதல் எழுபது அடி வரையிலும் வளருகிறது. உச்சியில் இருபது இருபத்தைந்து மட்டைகள் ஒன்றின்மேல் ஒன்றாக அமைந்

திருக்கும். அம்மட்டைகள் சுமார் பன்னிரண்டடி நீளமுடை யவை. மட்டையின் இருபுறத்திலும் ஈர்க்கோடு கூடிய நீண்ட ஓலைகள் உண்டு. மட்டை முதலில் குருத்தாக வெளிப்படும். பிறகு முற்றிப் பசுமை நிறமடையும்; பின்பு பழுத்து உலர்ந்து கீழே விழும்.

2. தென்னை மரத்தில் பாளை தோன்றும். அதுதான் தென்னையின் விரியாத பூ. பாளையிலிருந்து ஒரு வகையான



சாறு இறக்குவார்கள். அதற்குக் கள் என்று பெயர். கள் மயக்கம் தரும் பொருள். ஆகையால் அதைப் புத்திமான் கள் பருகமாட்டார்கள். பாளை விரிந்தவுடன் அதில் மஞ் சள் நிறமான அழகிய கதிர்கள் தோன்றும். அக் கதிர்களி லிருந்து சிறிய காய்கள் உற்பத்தியாகும். அவைகளுக்குக் குரும்பை என்று பெயர். குரும்பை முற்றி இளங்காய் ஆகும். அது பெரும்பாலும் பச்சை நிறமாக இருக்கும். அதனுள் தித்திப்பான நீர் நிறைந்து இருக்கும். அந்நீருக்கு இளநீர் எனப் பெயர். இளநீர் தேகத்துக்குக் குளிர்ச்சியைத்

தரும் ; தாகத்தைப் போக்கும். இவ் விளநீர் உள்ள இளங் காய்க்கும் 'இளநீர்' எனப் பெயர் வழங்கிவருகிறது. முற்றின தேங்காய்க்குள் வெண்மையான பருப்பும், தித்திப்பான தண்ணீரும் இருக்கும். பருப்பு என்பது தேங்காயினுள் ளிருக்கும் வெண்மையான பொருளே. இதனைத் தேங்காய் என்றே வழங்கி வருகிறார்கள். பருப்புக்கு மேலே ஓடும், ஓட்டுக்குமேலே நாரும், நாருக்கு மேற் புறத்தில் உறுதியான தோலும் அமைந்திருக்கும். இவையெல்லாம் சேர்ந்ததே தேங்காய் எனப்படுவது.



3. தென்னை மரத்திலிருந்து நமக்குக் கிடைக்கும் பொருள்களில் தேங்காய் முக்கியமானது. தேங்காயின் மேற்றோலும் நாரும் சேர்ந்து மட்டை எனப்படும். அம்மட்டை அடுப்பெரிக்க உபயோகப்படுகிறது. நாரைக் கயிறாகத் திரித்துப் பாய்கள் செய்கிறார்கள்; கப்பல்களைக் கட்டி வைப்பதற்கும் தேர் இழுப்பதற்கும் ஏற்ற பெரிய வடங்களும் இந்த நாரினால் செய்யப்படுகின்றன. இன்னும், இது மெத்தை, திண்டு, தலையணை முதலியவைகள் செய்வதற்கும் உபயோகப்படுகிறது.

4. தேங்காயானது இந்துக்கள் சுவாமிக்குப் படைக்கும் பொருள்களில் ஒன்று. பிரதி தினமும் தேவாலயங்களில் நூற்றுக் கணக்கான தேங்காய்கள் உடைபடுகின்றன. அதனுள்ளிருக்கும் பருப்பு மிகவும் சுவையுள்ளது. அதைக் கறிகளுக்கும் பலகாரங்களுக்கும் உபயோகப்படுத்துகிறார்கள். பருப்பை வெயிலில் உலர்த்தி, செக்கிலிட்டு ஆட்டி, எண்ணெய் எடுக்கலாம். தேங்காயெண்ணெய் புண்களை ஆற்றும்; உலோக வகைகளில் துருப்பிடிக்காது தடுக்கும்; தலையிலும் உடம்பிலும் தேய்த்துக் குளிக்க உதவும்; அது பக்ஷணங்கள் செய்யவும், விளக்கெரிக்கவும், மெழுகுவர்த்தி செய்யவும் உதவுகின்றது.

5. பருப்பின் மேலிருக்கும் ஓட்டுக்கு கொட்டங்கைச்சி என்று பெயர். அதனால் அகப்பைகளும், கிண்ணங்களும், குடுக்கைகளும் இன்னும் சில வீட்டுச் சாமான்களும், செய்யலாம்.

6. தென்னை மரத்தில் காய்கள் குலை குலையாய்க் காய்க்கின்றன. குலை யொன்றுக்கு, பத்து முதல் முப்பது காய்கள் வரையில் இருக்கும். தென்னைமரம் மணற்பாங்கான பூமியில் செழித்து வளரும். அது வருஷம் முழுவதும் காய்த்துக்கொண்டே இருக்கும். ஆகையால் நமது தேசத்தவர்கள் அதை மிகவும் அருமையான தாவரமாக மதிக்கிறார்கள்.

7. தென்னையோலையைக் கீற்றாக முடைந்து வீடுகளுக்குக் கூரை வேய்வார்கள்; பாயாகப் பின்னுவார்கள்; அதனால் பூக் குடலைகள், விசிறிகள் முதலியனவும் செய்யப்படுகின்றன. ஓலையிலுள்ள ஈர்க்கினால் துடைப்பம் செய்யப்படுகின்றது.

8. தென்னையின் அடிமரம் வீடு கட்ட உதவுகிறது. அதனால் ஏற்ற மரம் செய்கிறார்கள். முற்றின பாளையை ஊற

வைத்துக் கயிறுகளாக அறுத்துக் கூரை கட்ட உபயோகிக்கிறார்கள்.

9. தென்னை மரத்தில் மனிதருக்குப் பயன்படாத பாகம் எதுவுமேயில்லை; தென்னை பயிராகி ஏழு வருஷங்களுக்குள் காய்க்க ஆரம்பிக்கும். சுமார் எழுபத்தைந்து வருஷங்கள் வரையில் காய்த்துக்கொண்டே யிருக்கும். அது கோடைக்காலத்தில்தான் மிகுதியாகக் காய்க்கும். ஆயினும், எக்காலத்திலும் தென்னை மரத்தில் காய்கள் அகப்படும். அது சுமார் நூறு வருஷம் வரையில் உயிரோடிருக்கும்.



## 23. யானை

1. நிலத்தில் வசிக்கும் பிராணிகள் எல்லாவற்றிலும் பெரியது யானை. அது குதிரை, மாடு, ஒட்டகம் முதலிய மிருகங்களைப் போலவே மனிதருக்கு அடங்கி வேலை செய்யும். நன்றாய் வளர்ந்த யானை ஏறக்குறைய பன்னிரண்டடி உயர

முள்ளதாக இருக்கும். ஆனால், சில தேசத்து யானைகள் ஏழு அல்லது எட்டடிக்கு மேல் வளர்வதில்லை.

2. யானை இந்தியாவிலும் இலங்கைத் தீவிலும், ஆப்பிரிக்கா கண்டத்தின் பல பாகங்களிலும் மிகுதியாகக் காணப்படுகின்றது. சீனா, ஜாவா, கொச்சின் முதலிய தேசங்களிலும் யானைகளைக் காணலாம். ஆப்பிரிக்காவில் காணப்படும் யானைகள் மற்ற தேசங்களின் யானைகளை விட மிகச் சிறியவை. மிகப் பருத்த யானை ஏறக்குறைய பதினாறடி நீளமுள்ளதாக இருக்கும். அதன் சரீரத்தில் மிகவும் பருத்திருக்கிற பாகம் இருபத்து நான்கடி சுற்றளவு உடையது. யானையின் கால்கள் பெரிய தூண்கள்போல் இருக்கும்.

3. யானைக்கு மிகவும் பருத்த கனமான தலை உண்டு. அதன் கழுத்து மிகக் குறுகி இருப்பதால் அது தலையைத் தாழ்த்த முடியாது. யானையின் முகம் மற்ற மிருகங்களின் முகத்தைப் போன்றதன்று; முகத்திலிருந்து பனை மரம் போன்ற நீளமான உறுப்பொன்று தொங்கிக்கொண்டிருக்கும். அதற்குத் துதிக்கை அல்லது தும்பிக்கை என்று பெயர். அது ஏறக்குறைய ஏழடி நீளமுடையது; அதுவே யானைக்குக் கையாகவும் மூக்காகவும் உபயோகப்படுகிறது. அது மிக்க வலிமை யுடையது. அதில் குழாய் போன்ற இரண்டு நாசித் துவாரங்கள் உண்டு. அவற்றின் வழியாகவே யானை சுவாசிக்கிறது. ஆகாரத்தை எடுத்து வாயில் வைப்பதற்கும், வேலை செய்வதற்கும், யானை தும்பிக்கையையே உபயோகப்படுத்துகிறது.

4. தும்பிக்கையின் நுனியில் ஒரு வகையான உறுப்பு அமைந்திருக்கிறது. அது மூன்று அல்லது நான்கு அங்குல நீளமுள்ளது. அவ்வுறுப்பின் முனை விரல் போலிருக்கும்.

அதனால் யானை ஊசி, புல்லின் இதழ் முதலிய மிகச் சிறிய பொருளையும் பொறுக்கி எடுக்கக்கூடும். தும்பிக்கையினால் யானை மிகப் பெரிய மரத்தையும் முறித்துக் கீழே வீழ்த்தி விடும். எந்த வேலையைச் செய்யவும் தும்பிக்கையே யானைக்கு உபயோகப்படுகிறது. ஆகையால் துதிக்கை யானைக்கு மிகவும் முக்கியமான உறுப்பு. யானை அதை மிகக் கவனமாய்ப் பாது காத்துக் கொள்ளும்.

5. யானையின் கண்கள் மிகச் சிறியவை. அவற்றால் அது மிகவும் தூரத்திலுள்ள பொருள்களையும் எளிதில் கண்டுகொள்ளும். அதன் காதுகள் முறம் போல அகன்றவை. துதிக்கையின் இருபுறத்திலும் வெண்மையான இரண்டு பற்கள் உண்டு. அவை மண்டையோட்டிலிருந்து முளைத்து வளருகின்றன. அவைகளுக்குத் தந்தம் என்று பெயர். அவைகளின் முழுநீளம் ஐந்தடி இருக்கும். மரங்களைப் பெயர்க்கவும், சத்துருவை எதிர்க்கவும் யானை தன் தந்தங்களை உபயோகப்படுத்துகிறது. தந்தங்களைக் கொம்பு என்றும் சொல்வதுண்டு. பெண் யானைக்குக் கொம்புகள் முளைப்ப தில்லை; முளைத்தாலும் மிகச் சிறியவையாயிருக்கும். யானைத் தந்தம் விலையுயர்ந்தது. யானைத் தந்தத்தினால் சித்திர வேலைப் பாடமைந்த பெட்டிகள், சிமிழ், பொம்மை, சீப்பு, கத்திப்பிடி முதலிய பொருள்கள் செய்யப்படுகின்றன.

6. யானையின் உடல் மிகவும் கனமானது; அதைத் தாங்க வேண்டியிருத்தலினால்தான் தூண்கள் போன்ற நான்கு பலமான கால்கள் அதற்கு அமைந்துள்ளன. முன் காலில் ஐந்து விரல்களும் பின் காலில் நான்கு விரல்களும் உண்டு. அவ்விரல்கள் பிரிந்திராமல் ஒன்றாய்ச் சேர்ந்திருக்கும். ஒவ்வொரு விரலிலும் தட்டையான பெரிய நகம் உண்டு.

யானையின் பாதம் அகன்று வட்டவடிவமாய் இருக்கும். அதில் தகடுபோன்ற பல சிறிய எலும்புகள் உண்டு. உள்ளங்காலில் தசை தளர்ந்து மிருதுவாயிருக்கும். யானை மிகவும் கனத்த பிராணியாகையால் அது நடக்கும்போது பாதம் அகன்று பூமியில் நன்றாய்ப் படியும். அதனால்தான் அது நடக்கும்போது மிகுந்த ஓசை உண்டாவதில்லை. யானை குதிரையைப்போல் நன்றாய் ஓட முடியாது; ஆயினும் அது மிகவும் விரைவாய் நடக்கும்.

7. யானைகள் பெருங் காடுகளில் சஞ்சரிக்கும். அவை தனித்திராமல் கூட்டம் கூட்டமாய் வாழும் இயல்புடையவை. அவைகள் கூட்டமாய்ச் செல்லும்போது வயதில் முதிர்ந்த பலமுள்ள யானைகள் முன்னும், இளமையான யானைகள் பின்னும், குட்டிகளும் பலமற்ற யானைகளும் நடுவிலும் செல்வது வழக்கம். பகைவர் எதிர்ப்பட்டால் முன்னே செல்லும் யானைகள் எதிர்த்துச் சண்டைசெய்து கொன்றுவிடும். நெருப்பைக் கண்டால் யானைகள் மிகவும் அஞ்சும்.

8. பெண் யானை இரண்டு மூன்று வருடத்துக்கு ஒரு முறை ஒரு குட்டிபோடும். குட்டிக்கு யானைக்கன்று என்று பெயர். ஈன்றவுடன் யானையின் கன்று ஒரு பசுவின் கன்றளவுதான் இருக்கும். அது வளர்ந்து பெரிய யானை ஆவதற்கு, ஏறக்குறைய முப்பது ஆண்டுகள் செல்லும். யானை தன் கன்றுக்கு நெடுங்காலம் வரையில் பால்கொடுத்து வளர்க்கும். மனிதர்களால் வளர்க்கப்படும் யானைகள் பெரும்பாலும் கன்று போடுவதில்லை.

9. யானை சாக பக்ஷிணி. யானைக்குப் புல், இலை தழை, வைக்கோல் முதலியவை முக்கியமான உணவாகும். அதை நாம் நமது வீடுகளில் வைத்துத் தீனி போட்டுப்

பாதுகாப்பதானல் மிகுந்த செலவாகும். இதனலேயே "யானையைக் கட்டித் தீனி போட்டாற்போல்" என்னும் பழமொழியும் வழங்கிவருகிறது. ஆகையால் அரசர்களும், பெரிய பிரபுக்களும், மடாதிபதிகளுமே யானையை அலங்காரத்துக்காகவும் கௌரவத்துக்காகவும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். தென்னிந்தியாவிலுள்ள பெரிய இந்து ஆலயங்களிலெல்லாம் யானைகள் உண்டு.

10. யானை மனிதருக்கு மிகவும் உபயோகமுள்ள மிருகம். அது மிகவும் கனமான சாமான்களைத் தன் முதுகின்மேல் சுமந்துசெல்லும். பெரிய கட்டடங்களும் வாராவதிகளும் கட்டும்போது அவைகளுக்கு வேண்டிய கனத்த இரும்புச் சாமான்களைத் தூக்கவும் எடுக்கவும் யானைகளை உபயோகிக்கிறார்கள். பர்மா தேசத்தில் பெரிய தேக்கு மரக்காடுகள் பல உண்டு. மரம் வெட்டுகிறவர்கள் மரங்களை வெட்டிக் கீழே வீழ்த்தியபின் அவைகளை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டுபோக யானைகளை உபயோகிக்கிறார்கள். மிகப் பெரிய மரங்களை யானை தலையால் முட்டித் தள்ளிக்கொண்டு போய்க் குறித்த இடத்தில் சேர்க்கும். சிறு மரத்துண்டுகளைத் தும்பிக்கையால் தூக்கிக்கொண்டு போய் ஒழுங்காய் அடுக்கி வைக்கும். சில பெரிய மரங்களில் இரும்புச் சங்கிலி கட்டி யானையை இழுக்கச் செய்வார்கள். அரசர்கள் யானைகளுக்குப் பலவிதமான அணிகலங்களை அணிந்து, அவற்றின் முதுகின்மேல் அம்பாரி வைத்து, அதன் மேல் ஏறிச் சவாரி செய்வார்கள். அம்பாரி மேல் இருந்து அரசர்கள் புலி, சிங்கம் முதலிய காட்டு மிருகங்களை வேட்டையாடுவதும் உண்டு. முற்காலத்திலிருந்த அரசர்கள் யானைகளை யுத்தத்திற்கு உபயோகப்படுத்தி வந்தார்கள். அவர்

களுடைய நால்வகைப்படையில் யானைப்படை முக்கியமானது.

11. காட்டு யானைகளைப் பிடித்துப் பழக்கினால் அவை பழகி நாம் ஏவிய வண்ணம் செய்யும். யானை பிடிப்பவர்கள் பழகின யானையுடன் யானைகள் சஞ்சரிக்கும் காட்டுக்குச் செல்வார்கள். அவர்கள் தக்க இடம் பார்த்து, உறுதியான பெரிய மரங்களால் வேலி யடைப்பார்கள். அந்த அடைப்புக்கு ஒரு வாயில் மாத்திரம் இருக்கும். பழகின யானையை அடைப்புக்குள் விட்டு வைப்பார்கள். அதற்குப் பார்வை விலங்கு என்று பெயர். அதைக் கண்டவுடன் காட்டு யானைகள் அதனோடு சேர்வதற்கு அடைப்புக்குள் புகும். உடனே வாயிலை மூடிவிடுவார்கள். பிறகு சில நாட்கள் வரையில் காட்டு யானைகளைத் தீனியில்லாமல் அங்கேயே விட்டு வைப்பார்கள். அதனால் அவற்றின் மதமும் முரட்டுத்தனமும் அடங்கிவிடும். பிறகு அவைகளைக் கொண்டுவந்து பழக்குவார்கள்.

12. யானைகள் நெடுங்காலம் உயிரோடிருக்கும். மனிதர் கையில் அகப்பட்டுப் பழக்கப்பட்ட சில யானைகள் நூற்றுமுப்பது ஆண்டுகள் உயிருடன் இருந்ததாகச் சொல்லுகின்றனர். காட்டில் வசிக்கும் யானைகள் நூறு வருஷம் வரையில் உயிரோடிருக்கின்றன. ஆகையால் யானைக்கு வயது நூறு எனக் கணக்கிட்டிருக்கின்றனர்.

---

## 24. புருக்களும் வேடனும்

1. ஒரு நாள் வேடன் ஒருவன் பறவைகளைப் பிடிப்பதற்காகத் தன் வலையைக் கையில் எடுத்துக்கொண்டு புறப்பட்டான். அவன் பல விடங்களில் சுற்றித் திரிந்தும் ஒன்றும் அவனுக்கு அகப்படவில்லை. அதனால் அவன் ஒரு ஆற்றங்

கரையை அடைந்து, அங்குத் தன் வலையை விரித்துப் பல வகையான தானியங்களைத் தெளித்துவிட்டு அங்கிருந்த ஓர் செடி மறைவில் ஒளித்துகொண்டிருந்தான்.

2. பல புறுக்களுடன் அவ்விடம் பறந்துவந்த சித்திரக்கிரீவன் என்னும் புறு கீழே தானியங்கள் கிடப்பதைக் கண்டு, சமீபத்திலிருந்த ஒரு வன்னி மரத்தில் தன் பரிவாரங்



களுடன் இறங்கிற்று. சித்திரக்கிரீவன் மற்றைய புறுக்களைப் பார்த்து, "மனித சஞ்சாரமில்லாத இந்த இடத்தில் தானியம் எப்படி வரும்? நன்றாய் யோசனை செய்யாமல் இதைத் தின்னலாகாது" என்றது. அதைக் கேட்ட புறுக்களில் ஒன்று, "இப்படி யோசித்துக்கொண்டிருந்தால் ஒருபோதும் நமக்கு இரை அகப்படாது; சந்தேகப் படுகிறவர்கள் எப்போ

தும் துக்கத்தையே அனுபவிப்பார்கள். ஆகையால் நாமனை வரும் தைரியமாய்ச் சென்று இதைத் தின்பதே சரி; பிறகு வருவது வரட்டும்" என்றது.

3. அப்படியே புறாக்கள் எல்லாம் கீழே இறங்கித் தானியத்தைத் தின்னத் தலைப்பட்டன; உடனே வலையில் அகப்பட்டுக்கொண்டன. அதைக்கண்ட சித்திரக்கிரீவன், "ஐயோ! நம்முடைய கூட்டத்தவர்கள் வலையில் அகப்பட்டுக் கொண்டார்களே! நாம் இங்குத் தனியா யிருப்பதில் பயன் என்ன?" என்று சொல்லித் தானும் கீழேவந்து வலையில் அகப்பட்டுக் கொண்டது.

4. புறாக்கள் வலையில் சிக்கிக்கொண்டதைக் கண்ட வேடுவன் சந்தோஷத்தோடு அவைகளைப் பிடிக்க ஓடிவந்தான். இதைக் கண்ட புறாக்கள் சித்திரக்கிரீவனைப் பார்த்து, "நாங்கள் நீ சொன்னதைக் கேளாமல் இந்த மூடப்புறாவின் பேச்சைக் கேட்டு வலையில் அகப்பட்டுக்கொண்டோம்" என்று சொல்லி விசனப்பட்டன.

6. அப்போது சித்திரக்கிரீவன், "நடந்த செய்தியைப் பற்றி இப்பொழுது ஆலோசிப்பதில் பயனில்லை. நான் ஒரு உபாயம் சொல்லுகிறேன். நாம் எல்லோரும் வலையுடன், ஒருசேரப் பறந்து வேறு இடத்துக்குப் போகவேண்டும். அப்படிச் செய்தால் நம்முடைய உயிரைக் காப்பாற்றலாம்" என்றது. அதைக் கேட்டவுடன் எல்லாப் புறாக்களும் வலையோடு பறந்துபோயின.

6. அதைக் கண்ட வேடுவன் ஆச்சரியமடைந்து, 'ஓகோ, இவை ஒரே மனமாய் வலையோடு பறக்கின்றன; ஆயினும் இவைகளுக்குள் சண்டை நேரிடும்; அப்பொழுது இவைகளைப் பிடித்துக்கொள்ளலாம்' என்று எண்ணிக்கொண்டு

அவைகளின் பின்னே ஓடினான். புறாக்கள் வேகமாய்ப் பறந்து அவன கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்து போயின. ஆகையால் வேடன் மிக்க வருத்தத்தோடு திரும்பிவிட்டான்.

7. சித்திரக்கிரீவன் தன் கூட்டத்தோடு தன்னுடைய சிநேகிதனாகிய இரணியகன் என்னும் எலியரசன் வசிக்கும் வனத்தில் போய் இறங்கிற்று. புறாக்கள் இறங்கின சப்தத்தைக் கேட்டு இரணியகன் வளையிலிருந்து வெளியே வந்து சித்திரக்கிரீவனைப் பார்த்துச் "சிநேகிதா, என்ன விசேடம்?" என்றது.

8. சித்திரக்கிரீவன், "நாங்கள் மூடத்தனமாய் இந்த வலையில் சிக்கிக்கொண்டோம்; உன் பற்களால் இந்த வலையைக் கடித்து அறுத்து எங்களை விடுவி" என்றது.

9. இரணியகன் அப்படியே வலையைத் தன் கூரிய பற்களால் கடித்து அறுத்துப் புறாக்களை விடுவித்தது. புறாக்கள் எலிக்கு நன்றி கூறிச் சுகமாய்ப் பறந்துபோயின.

10. சிறுவர்களே! இக்கதையினால், 'நாம் எந்தக் காரியத்தையும் நன்றாய் ஆராய்ந்து செய்ய வேண்டும்; அவசரப்பட்டு ஒன்றும் செய்யலாகாது; சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை' என்னும் நீதிகளைத் தெரிந்துகொள்ளுகின்றோமல்லவா?

---

## 25. இரப்பர் மரம்

1. சிறுவர்களே, நீங்கள் காகிதத்தில் எழுதின எழுத்துக்களை அழிக்க வேண்டுமானால் என்ன செய்கிறீர்கள்? தடிப்பான தோல் போன்ற ஒரு பொருளினால் தேய்த்து அந்த எழுத்துக்களை அழித்துவிடுகிறீர்கள் அல்லவா? அந்தப் பொருளுக்கு ஆங்கிலத்தில் 'ரப்பர்' என்று பெயர். ரப்பர்

என்னும் சொல்லுக்குத் 'கிடைக்கும் பொருள்' என்று அர்த்தம். அந்தப் பொருள் எப்படி நமக்குக் கிடைக்கிற தென்று நீங்கள் அறிந்துகொள்ள வேண்டுமன்றோ? நமது நாட்டிலுள்ள அத்தி மரத்தை நீங்கள் பார்த்திருக்கலாம்.



அதுபோன்ற ஒருவகை மரம் சில நாடுகளில் உண்டு; அதற்கு 'ரப்பர் மரம்' என்று பெயர். அது ஆதியில் தென் அமெரிக் கா்விலும் மலேயா நாடுகளிலும் உற்பத்தியாயிற்று. இப்பொ ழுது அதை இலங்கைமுதலிய இடங்களிலும் பயிரிடுகின்றன ர்

2. இரப்பர் மரம் மிக உயரமாக வளரும். அதற்குப் பல கிளைகளும், அழகான இலைகளும் உண்டு. அவ்விலைகள் மிகவும் மென்மையாயும் பளபளப்பாயும் இருக்கும். இலைகளின் அழகைக் கருதி இரப்பர்ச் செடிகளை இங்கிலாந்திலுள்ள சில தோட்டங்களில் வைத்து வளர்க்கிறார்கள்; ஆயினும் அங்கு நன்றாய் ஓங்கி வளர்வதில்லை. மலைச்சாரல்களும் சிறு குன்றுகளுமே அம்மரம் செழித்து வளர்வதற்குத் தக்க இடங்கள். அம்மரத்தின் காய்கள் ஏறக்குறைய ஒரு பாக்களவு பருமன் இருக்கும்; காய்கள்முற்றிப் பழுக்குமாயினும் அப்பழம் உண்பதற்கு உதவாது. இரப்பர் மரம் பத்துப் பன்னிரண்டு அடி வரையிலும் நேராய் வளர்ந்தபின் கிளைகள் விடும். அடிமரத்தைத் தடிப்பான பட்டை மூடிக்கொண்டிருக்கும். பட்டையில் தடிப்பான ஒருவகைத் திரவப்பொருள் உண்டு. அதுவே ரப்பர் பால் என்று சொல்லப்படுவது. அந்தப் பாலைக் கொண்டுதான் இரப்பர் செய்கிறார்கள்.

3. மழைக்காலமே இரப்பர் பால் எடுப்பதற்கு ஏற்ற காலம். அப்பொழுது இரப்பர் மரங்களில் பால் மிகுதியாக உண்டாகும். மரப்பட்டையைக் கத்தியால் வெட்டி, அவ்வெட்டுகளுக்குக் கீழே தகரக் கிண்ணங்களைக் கட்டிவைப்பார்கள். அக்கிண்ணங்களில் பால் வடியும். பால் எடுக்கிறவர்கள் கிண்ணங்களில் வடிந்திருக்கும் பாலை எடுத்துத் தொட்டிகளில் சேர்ப்பார்கள்.

4. மரத்தை அடிக்கடி வெட்டினால் பால் அதிகமாய் அகப்படாது. ஒரு முறை வெட்டிப் பால் எடுத்துவிட்டால், பிறகு ஒரு மாதம் வரையிலாவது மரத்தில் பால் எடுக்காமல் வறிதே விட்டு வைக்கவேண்டும். அப்படிச் செய்யின் மரத்தில் மீண்டும் ஏராளமான பால் அகப்படும்.

5. இரப்பர்பால் வடியும்போது தேன்போலப் பழுப்பு நிறமாக இருக்கும். வெயிலில் உலரவைத்தால் அது சுத்தமான வெண்மை நிறமடையும். அதற்கு ஒருவகையான சுவையுமில்லை. இரப்பர் செய்கிறவர்கள் களிமண்ணால் பல உருவங்களைச் செய்து பாலில் தோய்த்து உலரவைப்பார்கள். பால் அந்த உருவத்தில் ஒட்டிக்கொள்ளும். அது உலர்ந்தபின் காகிதம்போல் மெல்லிய படையாக இருக்கும். பிறகு இவ்விதமாக அனேகமுறை தோய்த்துத்தோய்த்து வெய்யிலில் உலரவைப்பார்கள். அதனால் இரப்பர் படைபடையாக ஒன்றோடொன்று ஒட்டித் தடிப்பாகின்றது. இங்ஙனம் களிமண் உருவங்களில் இரப்பர்பால் படிந்து தடிப்பான பின்னர் இரப்பரால் மூடப்பட்டிருக்கும் அவ்வுருவங்களை உடைத்து ஓடுகளைத் துண்டுதுண்டாக மிகவும் பக்குவமாக எடுத்து விடுவார்கள். இரப்பர் மாத்திரம் களிமண் உருவத்தின் வடிவமாய் நின்றுவிடும். அதன் நிறம் வெண்மையாக இருக்கும். இரப்பர்பாலை இவ்விதமாக வெயிலில் உலரவைத்தே பெரும்பாலும் இரப்பர் தயார் செய்கிறார்கள். அமெரிக்காவிலுள்ளவர்கள் அதிக புகையுள்ள பதமான சிறு தீயில் இரப்பர்பாலை உலர்த்துவார்கள். இவ்விதமாய் உலர்த்துவதனால் இரப்பர் கருமை நிறமடைகிறது.

6. இரப்பரால் பாதரக்ஷை செய்கிறார்கள். மீன்பிடிக்கும் சிறிய படகுகளில் தண்ணீர் புகுந்து கொள்ளாமல் அதன் வெளிப்புறத்தில் இரப்பர் பாலைப் பூசிவைப்பதுண்டு. இரப்பரில் தண்ணீர் இறங்காது. ஆகையால் அதைக் கரைத்து அல்லது உருக்கித் துணிகளில் பூசி உலர வைப்பார்கள். அதற்குத் 'தண்ணீர் இறங்காத் துணி' என்று பெயர். அத்துணிகளால் மேல் அங்கிகள் செய்து கொள்ளுகிறார்கள்.

7. இரப்பர் நீளும் தன்மையுடையது. இரப்பரைப் பிடித்து இழுத்தால் நீளும்; விட்டுவிட்டால் மீண்டும் பழைய நிலையை அடையும். இத்தன்மையை நெகிழ்ச்சி என்பார்கள். இரப்பருக்கு நீண்டு சுருங்கும் தன்மையிருப்பதால் அது பலவகை வேலைகளுக்கு உதவுகிறது. இடுப்பில் கட்டிக்கொள்ளும் கச்சை செய்வதற்கும் அது மிகவும் பொருத்தமானது.

8. இரப்பரைக் கரைத்து அல்லது உருகச்செய்து அச்சுக்களில் வார்த்து நமக்கு இஷ்டமான பொருள்களைச் செய்து கொள்ளலாம். இரப்பருக்குச் சூடு காட்டி இளகச் செய்து எந்த உருவத்தையும் செய்யலாம். குளிர்ந்தவுடன் அந்த உருவம் அப்படியே கெட்டியாகி நின்றுவிடும். இவ்விதமாகவே, விளையாட்டுச் சாமான்களும் இன்னும் பலவகையான பொருள்களும் செய்யப்படுகின்றன. வண்டிச் சக்கரங்களின் கட்டுகளாகவும் இரப்பரை உபயோகிக்கிறார்கள். ஆதியில் இரப்பரை எழுத்துக்களை அழிப்பதற்கு மாத்திரமே உபயோகித்து வந்தார்கள். அதனால்தான் 'ரப்பர்' என்ற பெயர் ஏற்பட்டது; அப்பெயரே இன்றும் வழங்கிவருகிறது.

9. இரப்பர் மிகவும் உபயோகமுள்ள பொருள். அதற்கு முக்கியமான மூன்று குணங்கள் உண்டு. அவை நெகிழ்ச்சித் தன்மை, நீர் சுவராதிருத்தல், உஷ்ணத்தினால் உருகி மீண்டும் கெட்டியாதல் என்பவையே. நீண்டு சுருங்கும் நெகிழ்ச்சித் தன்மை இரப்பருக்கு இருப்பதால் அதற்கு இன்னொரு குணமும் ஏற்படுகிறது. இரப்பரைக் கடினமான ஒரு பொருளின்மேல் எறிந்தால் அது மிக வேகமாய் மேலே கிளம்பி மீண்டு வருகிறது. அதனால்தான் நீங்கள் ஆடும் பந்துகள் இரப்பரால் செய்யப்படுகின்றன.

10. இரப்பர் வாணிபத்தால் ஏராளமான பொருள் சம்பாதிக்கலாம். ஆகையால், இப்பொழுது பல நாடுகளில் ஆங்கிலேயர் இரப்பர்த் தோட்டங்களை ஏற்படுத்தி இரப்பர் மரங்களைப் பயிராக்குகிறார்கள். அங்கு ஆயிரக்கணக்கான மக்கள் கூலி வேலை செய்கிறார்கள்.

---

## 26. புலியும் பிராமணனும்

(பாட்டு)

மூப்புடைப் புலிதான் ஒன்று மூழ்கிளர் ஏரி யின்கீழ்க்
காப்புடன் தருப்பை தன்னைக் கையில்வைத் திருக்கும்போது
நாப்புடை மறைவ லாளன் நண்ணிஅவ் வழியிற் செல்லக்
கூப்பிடல் செய்(து) அன்னோனைக் குறித்தந்தப் புலிதான் கூறும். 1

"அந்தணா! இந்தக் காப்பை அளிப்பன்; நீவா" என் றோதச்
சிந்தையில் வெட்கை கூர்ந்து செப்புவான் "புலியா ரே! நீர்
வெந்துயர்க் கொலை மாந்தர்க்கு விளைப்பது விட்டுத் தானம்
எந்தநல் வழியிற் செய்வீர்; எனக்கதைக் கூறு" கென்றான். 2.

புலியது கேட்டு "நானோ, பூசுரா! நகமும் பல்லும்
இலன்; கிழ மானேன்; பாவம் இழைப்பது விடுத்துநாளும்
பொலிதரு தானம் செய்கை பொருள்எனக் கொண்டேன் அஞ்சேல்
சலமதில் மூழ்கி வந்து தரும் இதைக் கொடுபோ" என்ன. 3.

நன்றென மறையோன் மூழ்க நண்ணினன் ஏரி நீரில்;
அன்றவன் கால்கள் சேற்றில் அழுந்திடத் திகைத்து நின்றான்;
சென்றது புலி "நான் உன்னைச் சேற்றினின் றெடுப்பேன்" என்னக்
கொன்றது குருதி தன்னைக் குடித்தது களிப்பி னோடே. 4.

—பஞ்சதந்திரம்

---

## 27. இரும்பு

(சகோதரர் இருவர் உரையாடல்)

**அண்ணன்:**—அடே கண்ணா, நீ கையில் வைத்து விளையாடிக்கொண்டிருப்பது என்ன? இங்கே கொண்டு வா பார்க்கலாம்.

**கண்ணன்:**—அண்ணா, இது ஒரு கத்தி; இதை மாமா எனக்கு வாங்கிக் கொடுத்தார்.

**அண்ணன்:**—கத்தி நன்றாய்த்தானிருக்கிறது. நீயோ சிறுவன்; கத்தியை உபயோகிப்பது எவ்விதமென்று உனக்குத் தெரியாது.

**கண்ணன்:**—எனக்குத் நன்றாய்த் தெரியும். அடிக்கடி நான் பென்சிலைச் சீவ வேண்டியிருக்கிறது; ஆகையால் எனக்குக் கத்தி அவசியம் வேண்டும்.

**அண்ணன்:**—சரிதான், பத்திரமாய் வைத்துக்கொள்; பென்சிலைச்சீவும்போது உன் கையை அறுத்துக்கொள்ளாதே?

**கண்ணன்:**—மாமாவும் அப்படித்தான் சொன்னார். நான் மிகவும் கவனமாய்த்தான் இருக்கிறேன். கத்தியை எப்படிச் செய்கிறார்கள்.

**அண்ணன்:**—இதோ பார், இந்தக் கத்தியில் இரண்டு பாகங்கள் இருக்கின்றன. ஒரு பாகத்துக்கு அலகு என்றும் மற்ற பாகத்துக்குப் பிடி என்றும் பெயர். அலகுதான் முக்கியமான பாகம். இந்த அலகைக்கொண்டுதான் பென்சிலைச் சீவுகிறோம். பிடி மரத்தால் செய்யப்படுகிறது. தந்தத்தாலும் இரும்பினாலும் பிடிகளைச் செய்வதுண்டு.

**கண்ணன்:**—சரி, அலகை எப்படிச் செய்கிறார்கள்.

**அண்ணன்:**—அலகு இரும்பினால் செய்யப்படுகிறது.

**கண்ணன்:**—இரும்பு எங்கிருந்து கிடைக்கிறது?

அண்ணன்:—இரும்பு பூமியிலிருந்து கிடைக்கிறது.

கண்ணன்:—என்ன அண்ணு! ஆச்சரியமா யிருக்கிறது. பூமியில் மண் தானே இருக்கிறது. இரும்பு இல்லையே!

அண்ணன்:—தம்பி, அப்படியல்ல; பூமியை வெட்டினல் கல்லைத் தவிர வேறு பல வகையான கடினமான பொருள்கள் கிடைக்கின்றன. அவைகளுக்கு உலோகங்கள் என்று பெயர். முக்கியமான உலோகங்கள் ஐந்து. அவைகளில் இரும்பும் ஒன்று.

கண்ணன்:—மற்ற உலோகங்கள் எவை?

அண்ணன்:—மற்றவை பொன், வெள்ளி, செம்பு, ஈயம் என்பவை. இந்த ஐந்தும் பஞ்சலோகங்கள் எனப்படும்.

கண்ணன்:—இரும்பை எப்படி எடுக்கிறார்கள்?

அண்ணன்:—இரும்பு விளையும் பூமியைக் கண்டுபிடித்து வெட்டினல் அங்கு இரும்பு கிடைக்கும். இரும்பை வெட்டி எடுக்கும் இடம் கனி அல்லது சுரங்கம் என்று கூறப்படும். இரும்பு சுரங்கத்தில் தனியாய் அகப்படுகிறதில்லை; மண், கல், கந்தகம் முதலிய வேறு சில பொருள்களோடு கலந்து கிடக்கும்.

கண்ணன்:—சுத்தமான இரும்பு எப்படிக்கிடைக்கிறது?

அண்ணன்:—இரும்பு மற்ற பொருள்களோடு சேர்ந்து கட்டிகளாக அகப்படுகிறது.அக்கட்டிகளை உடைத்துப் பொடியாக்கிக் கொஞ்சம் சுண்ணும்பும் கரியும் சேர்த்துப் பெரிய பாத்திரத்திலிட்டுப் பெருந் தீ மூட்டி உருக்கினல், அது உருகும். அப்பொழுது கல், மண் முதலியவைகள் மேலே மிதக்கும். இரும்பு பாத்திரத்தின் அடியில் தங்கிவிடும். அப் பாத்திரத்தில் சுலபமாய்த் திறக்கவும் மூடவும் தக்க துவாரங்களுண்டு. அத் துவாரங்களின் வழியாய் உருக்

கின இரும்பு வெளியே சென்று, மண்ணுற் செய்த அச்சுக் களில் பாயும். பின்பு அது குளிர்ந்து கெட்டியாகும். அந்த இரும்புக்கு வார்ப்பிரும்பு என்று பெயர். வார்ப்பிரும்பு தண்டவாளம் என்றும் சொல்லப்படும்.

கண்ணன்:—கத்தியை இந்த இரும்பினுல்தான் செய்கிறார்களா?

அண்ணன் :—இல்லை. வார்ப்பிரும்பு உடையும் தன்மையுள்ளது. அதைத் தகடாய் அடிக்க முடியாது. ஆகையால் அது கத்தி செய்வதற்கு ஏற்றதன்று.

கண்ணன்:-வார்ப்பிரும்பை எதற்கு உபயோகிக்கிறார்கள்.

அண்ணன் :—வார்ப்பிரும்பினுல் குழாய்கள், கட்டில்கள், பாலங்களுக்கு வேண்டிய உத்திரங்கள் முதலிய பல பொருள்கள் செய்யப்படுகின்றன.

கண்ணன் :—கத்தி எதனுல் செய்யப்படுகிறது?

அண்ணன்:—கத்தி எஃகினுல் செய்யப்படுகிறது.அதைப் பற்றிச் சொல்லுமுன் இன்னெரு விஷயம் சொல்லுகிறேன் கேள்.

கண்ணன் :—சரி, சொல்லுங்கள்.

அண்ணன் :—வார்ப்பிரும்பைக் காய்ச்சி அதிலிருக்கும் கரியை நீக்கிச் சுத்தப்படுத்தினுல் அது சுத்தமான இரும்பாகும். அதைத் தகடாக அடிக்கலாம்; கம்பியாக நீட்டலாம். அதை எளிதில் உருக்க முடியாது. ஆயினும் பழுக்கக் காய்ச்சி ஒன்றோடொன்று ஒட்டலாம். அதற்குத் தேனிரும்பு என்று பெயர்.

கண்ணன் :—தேனிரும்பினுல் என்ன செய்கிறார்கள்?

அண்ணன் :—அதனுல் ஆணி, பூட்டு, சாவி, இலாடம் முதலிய பல சாமான்களைச் செய்கிறார்கள்.

கண்ணன்:—கத்தி எஃகினால் செய்யப்படுகின்றது என்று சொன்னீர்களே. எஃகு எப்படிக் கிடைக்கிறது?

அண்ணன் :—தேனிரும்போடு நூற்றுக்கு ஒரு பங்கு வீதம் கரி சேர்த்து உருக்கினால் எஃகு ஆகும். இது உடையக் கூடியதுதான்; ஆயினும் மிகவும் உறுதியானது; வெகு நய முள்ளது. இதனால் பலவகையான கத்திகள், உளிகள், துப் பாக்கிக் குழாய்கள், இருப்பாணிகள் முதலிய சாமான்கள் செய்கிறார்கள். எல்லா வகையான ஆயுதங்களும் எஃகினா லேயே செய்யப்படுகின்றன.

கண்ணன் :—அண்ணா! தேனிரும்பினால் கத்தி முதலிய ஆயுதங்கள் செய்யக்கூடாதா?

அண்ணன் :—செய்யலாம். ஆயுதங்கள் கூர்மையான முனைகளை உடையவையாயும் வளையாமலும் இருக்கவேண்டும். தேனிரும்பினால் செய்த ஆயுதங்களின் முனையைத் தேய்த்துக் கூராக்கலாமாயினும் அவை உபயோகிக்கும்போது வளைந்து விடும். ஆகையால் ஆயுதங்களைப் பெரும்பாலும் தேனிரும்பி னால் செய்வதில்லை. செய்தாலும் முனையில் எஃகைத் துவைப் பார்கள். எஃகு தான் ஆயுதங்கள் செய்வதற்குத் தகுந்தது.

கண்ணன் :—அண்ணா! இப்பொழுது மூன்று வகை யான இரும்புகளைப் பற்றிச் சொன்னீர்கள். எல்லாம் பொது வில் இரும்புதானே?

அண்ணன்:—எல்லாம் பொதுவாக இரும்பு என்றுதான் சொல்லப்படும். ஆயினும் ஒன்றுக்கொன்று சிறிது வேறு பாடுடையது. அவ்வேறுபாடும் அவற்றிலுள்ள கரியின் அள வைப் பொறுத்தது. வார்ப்பிரும்பில் அதிகக் கரியுண்டு; தேனிரும்பில் கரி அதிகமாயிராது; தேனிரும்பை விட

எஃகில் கரி சிறிது அதிகம். எஃகு இந்த மூன்று வகையான இரும்புகளிலும் மிகவும் கெட்டியானது.

கண்ணன்:—இரும்பைப்போல் வேறு உலோகங்களில்லையா? அவைகளால் கத்தி முதலிய சாமான்களைச் செய்ய முடியாதா?

அண்ணன்:—வேறு உலோகங்கள் இருக்கின்றனவென்று முன்பே சொல்லியிருக்கிறேன். ஆயினும் அவை ஏராளமாய் அகப்படுவதில்லை. அவைகளின் விலை அதிகம். இரும்பு ஏராளமாய் அகப்படுகிறது. அதன் விலையும் மிகக் குறைவு. ஆகையால் மனிதருக்குச் சாதாரண உபயோகத்துக்கு வேண்டிய எல்லாச் சாமான்களும் இரும்பினலேயே செய்யப்படுகின்றன. இங்ஙனம் இரும்பு மிகுந்த உபயோகமாய் இருப்பதனல் அது பொன் போலக் கருதப்பட்டுக் கரும்பொன் என்னும் பெயராலும் வழங்கப்படுகிறது. இரும்பு இல்லையாயின் உலகத்தில் ஒரு வேலையும் நடைபெறாது.

கண்ணன்:—அண்ணா, இரும்பின் பொதுவான தன்மைகள் என்ன?

அண்ணன்:—இரும்பு இயற்கையில் சாம்பல் நிறமுடையது; பளபளப்பு முடையது. ஆயினும் காற்றுப்படுவதனலும் நீரோடு சம்பந்தப்படுவதனலும் நிறம் மாறித் துருப்பிடிக்கும். இரும்பு உருகும் தன்மையுள்ளது; மிக உறுதியானது. அதைத் தகடாக அடிக்கலாம்; கம்பியாக நீட்டலாம்.

கண்ணன்:—அண்ணா, இப்பொழுது இரும்பைப் பற்றி நன்கு தெரிந்து கொண்டேன். அது எங்கு அகப்படுகிறது? நமது தேசத்தில் கிடைப்பதில்லையா?

அண்ணன்:—நமது தேசத்தில் இரும்பு ஏராளமாய் உண்டு. மைசூர், வங்காளம், ஹைதராபாத்து முதலிய

இடங்களில் சுரங்கங்களிலிருந்து இரும்பு எடுக்கிறார்கள். ஆயினும் நிலக்கரி மேற்கூறிய இடங்களில் அகப்படுவதில்லை. இரும்பை உருக்கிச் சுத்தப்படுத்துவதற்கு நிலக்கரி அவசியம் வேண்டும். ஆகையால் இரும்பு எடுக்கும் தொழில் மேற் சொன்ன இடங்களில் மிகுதியாய் நடைபெறுவதில்லை. இங்கிலாந்தில் இரும்பும் நிலக்கரியும் ஏராளமாய் அகப்படு கின்றன. ஆகையால் அங்கு இரும்பு சம்பந்தமான கைத் தொழில்கள் அதிகமாக நடைபெறுகின்றன. இங்கிலாந்தின் செல்வத்துக்கும் பெருமைக்கும் காரணமாயிருப்பவை இரும் பும் நிலக்கரியுமே.

---

## 28. கிளைவ் என்னும் ஆங்கிலேய வீரர்

1. நம்மை இப்பொழுது ஆண்டுவருபவர்கள் ஆங்கிலே யர். அவர்களுடைய அதிகாரத்தை முதலில் இந்தியாவில் நிலை நிறுத்தியவர் 'ராபர்ட் கிளைவ்' என்ற வீரர். இங்கிலாந் தில் அவர் ஒரு சிறந்த குடும்பத்தில் பிறந்தவர். அவர் சிறுவராய் இருந்த காலத்தில் அவரிடத்தில் கோபம், அடங் காமை முதலிய குணங்கள் குடிகொண்டிருந்தன. பாடசாலைக் குச் சென்று பாடம் படிப்பதில் அவருக்கு விருப்பம் இல்லை. தம்மோடு ஒத்த வயதுள்ள சிறுவர் பலரைச் சேர்த்துக் கொண்டு அவர் வீண்காலம் கழித்துவந்தார்.

2. அவருக்குக் கல்வி கற்பிக்கவேண்டுமென்று எண் ணங்கொண்டு அவருடைய பெற்றோர் அவரைப்பாடசாலைக்கு அனுப்பினர். ஆயினும் அவர் பாடசாலைக்கு ஒழுங்காகப் போவதில்லை; துஷ்டப்பிள்ளைகள் பலரைச் சேர்த்து கொண்டு அவ்வூரிலுள்ள கடைக்காரரைப் பயமுறுத்திப் பணமாவது

தின்பண்டமாவது கொடுக்கும்படிக் கேட்பார். கொடுக்காதவர்களுடைய கடைகளிலுள்ள பலகணிகளின் கண்ணாடிகளை உடைத்துவிடுவார். இங்ஙனம் அவர் பலவித தகாத செயல்களைச் செய்துவந்தார்.



3. அவருடைய ஆசிரியர்கள் அவர் நன்கு கல்வி கற்க மாட்டார் என்று சொல்லி அவரை வெறுத்தார்கள்; ஆயினும் அவர்களில் ஒருவர்மாத்திரம் அவரை விரும்பினர். கிளைவிடத்தில் துணிவு, விசுவாசம் முதலிய சில சிறந்த குணங்கள் இருப்பதாக அவர் அறிந்தார். ஆகையால் கிளைவ் ஒருகாலத்தில் சிறந்த போர்வீரர் ஆவாரென்று அவர் சொன்னர்.

ஆயினும் பெற்றோர்கள் அவர் சொல்லியதை நம்பவில்லை. கிளைவினுடைய தந்தையாருக்குத் தன் மகனுடைய நடத்தை சிறிதும் பிடிக்கவில்லை; அவரை வெளிநாட்டுக்கு அனுப்பினால் அவர் திருத்தமடைந்து நல்வழிப் படலாம் என எண்ணினார்.

4. அக்காலத்தில் ஆங்கிலேய வர்த்தகர் சிலர் ஒன்று கூடி, ஒரு வர்த்தக சங்கத்தை ஏற்படுத்திக்கொண்டு, இந்தியாவில் வியாபாரம் செய்து வந்தார்கள். அந்த வர்த்தக சங்கத்துக்கு ஆங்கிலத்தில் ஈஸ்ட் இந்தியா கம்பேனி எனப் பெயர். கிளைவை அந்தச் சங்கத்தாருடன் இந்தியாவுக்கு அனுப்பினால் அவர் சீர்ப்பட்டு மேன்மையடைவார் என்று அவர் தந்தையார் கருதினார். ஆதலின் அவர் கிளைவை வர்த்தக சங்கத்தில் ஒரு உத்தியோகத்தில் அமர்த்த எண்ணிச் சங்கத்தாரிடம் தன் எண்ணத்தை அறிவித்தனர். அவர்களும் கிளைவிடம் உள்ள சில சிறந்த குணங்களைக் கருதிச் சங்கத்தின் கணக்கப் பிள்ளைகளில் ஒருவராக நியமித்து முதலில் சென்னப் பட்டினத்திற்கு அனுப்பினர். இங்கிலாந்துக்குச் சமீபமாகப் பிராஞ்சு என்னும் ஒரு தேசம் இருக்கிறது. அத்தேசத்தவர்களுக்கு பிராஞ்சியர் என்று பெயர். அவர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் அக்காலத்தில் பகைமை இருந்தது. பிராஞ்சியரும் இந்தியாவில் வாணிபம் நடத்தி வந்தார்கள்.

5. முன்னிருந்த பகையினாலும் வியாபாரப் போட்டியினாலும் ஆங்கிலேயருக்கும் பிராஞ்சியருக்கும் இந்தியாவில் சண்டை உண்டாயிற்று. அக்காலத்தில்தான் கிளைவ் ஆங்கிலேய வர்த்தக சங்கத்தாரிடத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்தனர். மிக்க தேக பலமும் தீரமும் உடைய கிளைவுக்கு கணக்கப்பிள்ளை உத்தியோகம் திருப்தி யளிக்கவில்லை. அவருக்கு இந்தியா புதிய தேசமாகையாலும் தம்மோடு பழகியவர்

இன்மையாலும் அவர் தாம் தனிமையாய் இருப்பதாகக் கருதினர். இக்காரணங்களினால் அவர் இரண்டுமுறை தம் கைத் துப்பாக்கியால் சுட்டுக்கொள்ள முயன்றார்; இரண்டு முறையும் குறி தவறினமையால் அவர் எண்ணம் நிறைவேறவில்லை.

6. ஆங்கிலேயருக்கும் பிராஞ்சியருக்கும் போர் தொடங்கியதும் அவர் கணக்கப்பிள்ளை வேலையை விட்டுச் சேனையில் ஓர் வீரராகச் சேர்ந்துகொண்டார்; விரைவில் ஒரு சிறிய சேனைத் தலைவராகவும் ஆனார். அக்காலத்தில் ஆற்காடு நவாப்புக்கும் திருச்சிராப்பள்ளியில் இருந்த மகம்மது ஆலிக்கும் சண்டை உண்டாயிற்று. ஆற்காடு சென்னைக்கு மேற்கில் ஐம்பது மைல் தூரத்திலுள்ள ஒரு நகரம். ஆற்காட்டு நவாப்பு பிராஞ்சியர் உதவியைப் பெற்றுத் திருச்சிராப்பள்ளியைப் பலமாய் முற்றுகையிட்டான். பிராஞ்சியர் ஆற்காட்டு நவாப்புக்கு உதவி செய்யவே, அவர்களுக்குப் பகைவரான ஆங்கிலேயர் மகம்மது ஆலிக்கு உதவி செய்தனர். கிளைவ் அந்தச் சமயத்தில் மிக்க தைரியத்துடன் ஆற்காட்டைத் தாக்கி அதைத் தம் வசப்படுத்திக் கொண்டார். இது காரணமாக ஆங்கிலேயருக்கும் பிராஞ்சியருக்கும் பின்னும் போர் நடந்தது. கிளைவ் தென்னிந்தியாவில் பிரஞ்சியார் பலத்தை ஒடுக்கி, மகம்மது ஆலியை ஆற்காட்டு நவாப்பாக்கினர். அதனால் ஆங்கிலேயருக்கு நன்மதிப்பு ஏற்பட்டது. ஆற்காட்டு நவாப்பு அவர்களுக்கு நண்பரானார். இவைகள் அனைத்துக்கும் காரணம் கிளைவ் என்னும் வீரரே.

7. இதன்பின் கிளைவ் தேக சௌகரியத்திற்காக இங்கிலாந்திற்குச் சென்றார். அங்கிருந்த ஆங்கிலேய பிரபுக்கள் அவர் இந்தியாவில் அடைந்த பெருங் கீர்த்தியைப்பற்றி முன்னரே கேள்விப்பட்டிருந்தார்கள். ஆகையால் அவர்கள்

அவரை மிக மரியாதையோடு வரவேற்றனர். அவர் அங்குச் சில மாதம் தங்கி மீண்டும் இந்தியாவுக்கு வந்து சென்னையில் இருந்தனர். சென்னையில் ஆங்கிலேயர் அக்காலத்தில் கட்டிய வர்த்தகசாலையும் கோட்டையும் இன்றும் உளது.

8. ஆங்கிலேயர் வங்காளத்திலுள்ள கல்கத்தாவிலும் ஒரு கோட்டை கட்டிக்கொண்டு வர்த்தகம் செய்து வந்தார்கள். அப்பொழுது வங்காளத்துக்கு ஒரு நவாப் அதிபதியாயினன். அவன் ஆங்கிலேயர் வசமிருந்த கல்கத்தாவைப் பிடித்துக்கொண்டு ஆங்கிலேயரை அங்கிருந்து துரத்திவிட்டான். இந்தச் செய்தி சென்னைக்கு எட்டியதும் கிளைவுக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று. உடனே அவர் ஒரு சேனையோடு கடல் மார்க்கமாக வங்காளத்துக்குச் சென்று கல்கத்தாவை நவாப் வசமிருந்து மீட்டார்; பிளாசி என்னுமிடத்தில் நவாப்பை முற்றிலும் தோற்கடித்தார். ஆங்கிலேயருக்குக் கட்டுப்பட்டு நடக்கக்கூடியவரும் நவாபின் சேனைத்தலைவரும் ஆகிய மீர்ஜாபர் என்பவரை வங்காளத்துக்கு நவாப்பாக நியமித்தார்.

9. மீர்ஜாபர் மிகவும் நன்றியுடையவர். அவர் ஆங்கிலேயர் தமக்குச் செய்த உதவிக்காக ஆங்கிலேயருக்கு கல்கத்தாவையும்அதைச்சுற்றியிருந்த இருபத்துநான்குஜில்லாக்களையும் கொடுத்துவிட்டார். இவைகளே இந்தியாவில்ஆங்கிலேயர் முதன்முதல் பெற்று அரசாண்டவைகள். பிறகு அவர்கள் வங்காள முழுவதையும் தங்கள் அதிகாரத்திற்குள்ளாக்கினர்கள். ஆங்கிலேயர் இந்தியாவில் அடைந்த வெற்றிகளில் பிளாசியில் அடைந்த வெற்றி முக்கியமானது. இந்த வெற்றியினல்தான் ஆங்கிலேயருடைய அரசாட்சி இந்தியாவில் நிலைபெற்றது. இந்த வெற்றிக்குக் காரணமானவரும் கிளைவே.

இங்ஙனமாக, இந்தியாவில் ஆங்கிலேயே ஆட்சி நிலைபெறுவதற்கு முதலில் அஸ்திவாரம் போட்டவர் கிளைவ் ஆவர்.

10. இத்தகைய அரிய செயல்களை முடித்துக் கிளைவ் இரண்டாம் முறை இங்கிலாந்துக்குச் சென்றார். அவருடைய கீர்த்தி எங்கும் பரவிற்று. இங்கிலாந்திலிருந்த அதிகாரிகள் அவர் செய்த வீரச் செயல்களுக்காக அவருக்கு "லார்டு" என்னும் பட்டம் அளித்தனர். லார்டு என்றால் பிரபு என்று பொருள். சில ஆண்டுகள் சென்றபின் இவர் மீண்டும் இந்தியாவுக்கு வந்தார். வர்த்தக சங்கத்தாருடைய அரசாட்சி முறையைச் சீர்ப்படுத்தினார்; சில காலம் இங்கிருந்து பின் தன் நாடாகிய இங்கிலாந்துக்குச் சென்றார். இத்தகைய வீரர் ஏதோ ஒரு மனோ வியாகூலத்தினால் தற்கொலை செய்து கொண்டு மாண்டனர்.

11. கிளைவ் சிறந்த வீரர்; அஞ்சா நெஞ்சும் மிக்க தேக பலமும் உடையவர். இந்தியாவில் அவர் செய்த வேலை வியக்கத்தக்கது. முதலில் இந்தியாவிலிருந்த பிராஞ்சியரையும் அவர்களுக்கு உதவியாக நின்று போர் புரிந்தவர்களையும் வென்றார்; பின்னர், ஆங்கிலேயருடைய வர்த்தகத்தை நிலை நிறுத்தினார்; அதன் பின்பு, ஆங்கிலேய அரசாட்சிக்கு அடிகோலினார்.



## 29. பெற்றோர் பக்தி

அல்லது

### தசரதர் சாபம்

(ஒரு சிறு நாடகம்)

இடம்:—அயோத்தி நகரையடுத்த ஒரு காடு.

காலம்:—மாலை.

நாடக பாத்திரங்கள்:—சலபோசனர், சுரோசனன், தசரதர்.

[ஒரு வனத்தில் முனிவர் ஒருவர் தம் மனைவியுடனிருந்து தவம் செய்கிறார். முனிவரும் அவர் மனைவியும் கண்ணிழந்தவர்கள். அவர்களுடைய புதல்வன் அருகிலிருந்து அவர்கட்குப் பணிவிடை செய்து வருகின்றான்.]

சலபோசனர்:—எங்கள் அருமைப் புதல்வா! நாங்கள் முற்பிறப்பில் செய்த புண்ணியத்தின் பயனாகவே நீ எங்களுக்குப் புத்திரனாகத் தோன்றியிருக்கிறாய். கண்ணிழந்த எங்களுக்கு நீயே கண்போல உதவுகிறாய். கண்மணியே! எங்களுக்கு வேண்டிய காரியங்களை யெல்லாம் நீ ஒருவனாகவே செய்து வருகின்றாய். அதனால் உனக்கு உடல் வருத்தம் மிகுதியும் உண்டாகுமே யென்று என் மனம் வருந்துகின்றது.

சுரோசனன்:—என்னருமைப் பிதாவே! இதைப்பற்றி நீங்கள் வருந்தவேண்டாம். பெற்றோர்க்குப் பணி செய்வதைவிடப் பிள்ளைகளுக்கு வேறு என்ன கடமை இருக்கிறது? நான் என் கடமையைச் செய்து வருவதை நினைக்க எனக்கு மிகுந்த மகிழ்ச்சியுண்டாகிறது.

சலபோசனர்:—என் கண்ணே! எனக்கு மிகுந்த தாகமாயிருக்கிறது. சிறிது தண்ணீர் கொண்டு வருவாயா?

சுரோசனன்:—அப்பா! இதோ கொண்டு வருகின்றேன்.

[சுரோசனன் ஒரு குடத்தை எடுத்துக்கொண்டு அருகிலிருந்த ஆற்றுக்குச் சென்று குடத்தில் தண்ணீர் மொள்ளுகின்றான். காட்டில் வேட்டைக்கு வந்த தசரதர் அந்த ஆற்றில் தண்ணீர் குடிக்க வரும் விலங்குகளை எதிர்பார்த்து ஒரு புதரில் மறைந்து நிற்கிறார்.]

தசரதர் :—(தனிமொழி) நாம் இங்கு வெகுநேரம் காத்திருந்தும் இதுவரையில் ஒரு விலங்காவது வரவில்லையே; பொழுதும் போயிற்று! (சற்று மௌனமாயிருந்து) ஆ! இப்பொழுதுதான் ஒரு யானை தண்ணீர் குடிக்கும் சத்தம் கேட்கிறது. இதைத் தவறாமல் விரைவில் எய்து கொல்ல வேண்டும்.

[தசரதர் அம்பை வில்லில் தொடுத்து முனிவரின் புதல்வன் தண்ணீர் மொண்டதனால் உண்டாகும் சத்தம் வருகின்ற திசை நோக்கி எய்கின்றார்.]

சுரோசனன் :—ஆ! என் செய்வேன்! அம்பு என் மார்பில் பாய்ந்ததே! யான் ஒருவருக்கும் யாதொரு தீங்கும் செய்ததில்லையே! ஓ தெய்வமே! [சோர்ந்து கீழே விழுகின்றான்.]

தசரதர்:—அந்தோ! என்ன காரியம் செய்தேன்! மனிதக்குரல் கேட்கிறதே! பெரும் பாவியாய் விட்டேனே! யாரோ ஒரு புண்ணியாத்மாவின்மேல் என் அம்பு பாய்ந்து விட்டது போலும்!

[தசரதர் விரைந்தோடிவந்து கையில் குடத்துடன் இரத்த வெள்ளத்தில் கிடக்கும் இளைஞனைக் கண்டு மன மிகத் துடித்து]

ஐயனே! நீ யார்? ஐயோ! யானை நீர் பருகுகின்றது என்று எண்ணியன்றோ அம்பை எய்தேன்!

சுரோசனன் :—ஐயா! நான் ஒரு வேதியச் சிறுவன். என் பெயர் சுரோசனன். என் தந்தை சலபோசனர் என்னும் முனிவர். என் தாய் தந்தையர் இருவரும் கண்ணிழந்தவர்கள். அவர்கட்குப் பணிவிடை செய்வதே எனது

முதற் கடமை. இப்பொழுது என் தந்தையின் தாகத்தைத் தணிக்கும்பொருட்டுத் தண்ணீர் கொண்டுவர இங்கு வந்து குடத்தில் நீர் மொள்ளுகையில்...........

தசரதர் :—ஆ! என் செய்வேன்! பெற்ரேரிடத்துப் பேரன்பு கொண்டுள்ள ஒரு சிறந்த மைந்தனைக் கொன்று விட்டேனே! மறையவன் மைந்தன் நீர் முகக்கும் சத்தத்தை யானை நீர் பருகும் ஓசை யென்று நினைத்து இப்பெருந் தீங்கிழைத்தேனே!

சுரோசனன் :—ஐயா! நீர் அறியாது செய்த குற்றத்திற்காக வருந்தவேண்டுவதில்லை. விதியின் செயல் இது. என் தந்தை நீர்வேட்கையினுல் வருந்துவர். நீர் இந்தக் குடத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டுபோய் அவருக்குக் கொடுத்து யான் இப்பொழுது என் பெற்ரேர்க்குச் செய்யும் வணக்கத்தையும் விளம்புவீராக.

[சிறுவன் கை கூப்பிய வண்ணமாய் உயிர் விடுகின்ருன். உடனே தசரதர் மிகவருந்தி, நீர்க் குடத்தையும் சிறுவனையும் தூக்கிக்கொண்டு சலபோசன முனிவரிடம் செல்லுகின்ருர். அவர் காலடி ஓசையை முனிவர் கேட்கின்ருர்.]

சலபோசனர் :—எங்கள் அருமைப் புதல்வனே! இந்நேரம் என்ன செய்தாய். நீ இது வரையில் வராததனுல் உனக்கு என்ன இடையூறு நேர்ந்ததோ என மனம் நொந்தோம். எங்கள் ஆருயிரே! கிட்ட வா ; கட்டியணைத்து முத்தமிட விரும்புகின்றேன்.

தசரதர் :—(மிகுந்த துயரத்துடன்)

ஐயா, யான் ஓர் அரசன் ; அயோத்தி நகரத்துள்ளேன் ;<br>
மைஆர் களபம் திருவி மறைந்தே வதிந்தேன் ; இருள்வாய்<br>
பொய்யா வாய்மைப் புதல்வன் புனல்மொண்டிடும் ஓதையின்மேல்<br>
கைஆர் கணை சென்றதலால், கண்ணில் தெரியக் காணேன்.

ஐயனே, நான் அயோத்தி நகரத்தரசன்; யானை ஒன்றை எய்யக் கருதி ஒரு புதரில் மறைந்திருந்தேன். இருட்டில் உமது புதல்வன் குடத்தில் நீர் முகக்கும் ஓசையை ஒரு யானை தண்ணீர் குடிக்கும் ஓசை யென எண்ணி அத்திசை நோக்கி அம்பை எய்தேன். நான் ஒன்றையும் கண்ணால் பார்க்கவில்லை. அம்பு பாய்ந்து அலறிய உமது மகன் குரலோசையைக் கேட்டுத் திடி திடித்து அவ்விடம் சென்றேன். நிகழ்ந்ததை அறிந்து மிக வருந்திய எனக்கு உம் புதல்வன் ஆறுதல்கூறி உமது நீர்வேட்கை தீர்ப்பதிலேயே கருத்துடையவனாய் 'இந்த நீரை எனது தந்தைக்குக் கொடுத்து எனது வணக்கத்தையும் கூறுவீராக' என எனக்குக் கட்டளையிட்டு உயிர் நீங்கினன்.

[பெற்றோர் இருவரும் பதைபதைத்துப் பூமியில் வீழ்ந்து புரண்டு புலம்புகின்றனர். தசரதர் அவர்கள் பாதங்களை வணங்கித் தான் தெரியாது செய்த குற்றத்திற்காகத் தன்னை மன்னிக்குமாறும் தான் அவர்கள் புதல்வனைப் போலவே அவர்கட்குப் பணிவிடை செய்வதாகவும் கூறுகின்றார்.]

சலபோசனர்:—

கண்ணுண் மணிபோல் மகவை இழந்தும், உயிர் காதலியா,
உண்ண எண்ணி இருந்தால் உலகோர் என்னென் றுரையார்!
விண்ணின் தலை சேருதும்யாம்; எம்போல் விடலை பிரியப்,
பண்ணும் பரிமாவுடையாய்! அடைவாய் படர்வான்;(என்று.)

எங்கள் கண்மணி போன்ற புதல்வனை இழந்தபிறகு யாங்கள் இவ்வுலகத்தில் உயிர் வாழக் கருதோம். இதோ நாங்களும் உயிர்விடுகின்றோம். நாங்கள் புத்திரனைப்

பிரிந்த சோகத்தால் இறப்பதுபோல, நீயும் உன் புதல்வன் பிரிவினால் உயிர் விடுவாயாக.

தசரதர்:—ஆ! கொடிய சாபம் வந்ததே! நமக்கோ நெடுங்காலமாகப் பிள்ளை இல்லை; இனிப் பிள்ளைப்பேறு உண்டாகும் என்று இம்முனிவர் இட்ட சாபத்தினால் அறிகின்றோம். ஆயினும், நமது புதல்வனின் பிரிவினாலன்றோ நமக்கு மரணம் நேர இருக்கிறது! விதியின் வலியைத் தடுக்க வல்லார் யார்? எல்லாம் ஈசன் செயல்.

---

## 30. மூதுரை

(ஔவையார் அருளிச் செய்தது)

1. நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொ லெனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லால்.

2. நல்லா ரொருவர்க்குச் செய்த வுபகாரம்
கல்மே லெழுத்துப்போற் காணுமே—அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மே லெழுத்திற்கு நேர்.

3. அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவல்ல
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

4. அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா.

5. உற்ற விடத்தி லுயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரை கண்டாற் பணிவரோ—கற்றாண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரந் தாங்கிற்
றளர்ந்து வளையுமோ தான்.

6. நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாந் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுங் குணம்.

7. நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று.

8. தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்க ளுறைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது.

9. நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாந்—தொல்லுலகில்
நல்லா ரொருவ ருளரே லவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை.

10. பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனல் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்ற லுடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமஞ் செயல்.

11. மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா—கடல்பெரிது

மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும்.

12. கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம்.

13. கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி.

14. வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மே லிட்ட கலம்.

15. அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே
ஒட்டி யுறவா ருறவு.

16. உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரு முண்டு.

17. எழுதியவா றேமென் றிரங்கு மடநெஞ்சே
கருதியவா றாமோ கருமம்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேல்
முற்பவத்திற் செய்த வினை.

18. கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே—விற்பிடித்து
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்.

19. நற்றா மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை யுகக்கும் பிணம்.

20. நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர்.

21. மன்னனும் மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையான்—மன்னனுக்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு.

22. சந்தன மென்குறடு தான்றேய்ந்த காலத்தும்
கந்தங் குறைபடா தாதலால்—தந்தம்
தனஞ்சிறிய ராயினுந் தார்வேந்தர் கெட்டால்
மனஞ்சிறிய ராவரோ மற்று.

23. சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
ஆந்தனையுங் காப்பர் அறிவுடையார்—மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம்.

---

## 31. நல்வழி

(ஔவையார் அருளிச் செய்தது)

1. சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி.

2. வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா—இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரந் தானினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்.

3. ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கா லுலகூட்டும்—மேற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டா ரிசைந்து.

4. ஒருநா ளுணவை யொழியென்றா லொழியாய்
இருநாளுக் கேலென்றா லேலாய்—ஒருநாளும்
என்னோ வறியாய் இடும்பைகூ ரென்வயிறே
உன்னோடு வாழ்த லரிது.

5. ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

6. பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சை பல சொல்லி இடித்துண்கை—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியா
துயிர்விடுகை சால வுறும்.

7. பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார்
பாவிகா ளந்தப் பணம்.

8. ஆன முதலி லதிகஞ் செலவானல்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனய் ஏழ்பிறப்புந் தீயனய்
நல்லார்க்கும் பொல்லனும் நாடு.

9. ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றுகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளு மீசன் செயல்.

10. ஆறிடு மேடும் மடுவும்போ லாஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து.

11. பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலும் நன்ருகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலுந் தோன்ரு துணர்வு.

## 32. கந்தன் தன் தந்தைக்கு எழுதிய கடிதம்.

10, நந்திகோயில் தெரு,
தெப்பக்குளம் P. O.
திருச்சிராப்பள்ளி
29-10-1930.

எனது அருமைத் தந்தையீர்,

தங்கள் திருவடிக்குப் பெரு வணக்கம். கடவுள் அருளால் இவ்விடம் யாவரும் சுகமே. அவ்விடம் உள்ள நம்மவர்களுடைய நலத்தை அறிய விரும்புகின்றேன்.

தாங்கள் 20-10-'30-ல் எழுதி விடுத்த கடிதம் கிடைத்தது. அதில் தாங்கள் எழுதிய வண்ணமே கவனமாய்ப் படித்து வருகின்றேன். சென்ற செப்டம்பர் மாதம் நடந்த பரீட்சையிலும் தேறி இருக்கின்றேன். எல்லாப் பாடங்களிலும் 100-க்கு 50-க்குமேல் மார்க்கு வாங்கியுள்ளேன்.

காவிரியாற்றில் சென்ற 25-ஆந் தேதி திடீரெனப் பெரு வெள்ளம் வந்தது. மூன்று நான்கு நாள் ஓயாது மழை பெய்ததே இதற்குக் காரணம். தாங்கள் இருக்கும் ஊரிலும் இங்ஙனமே அடாத மழை விடாது பெய்திருக்குமென நினைக்கிறேன். இப்பொழுது மழையும் ஓய்ந்திருக்கிறது; வெள்ளமும் அடங்கிவிட்டது.

இந்த ஊரில் புத்தக வியாபாரம் செய்யும் திரு. கோபால் பிள்ளை அவர்கள் புதிய புத்தகங்கள் சிலவற்றை அச்சிட்டு வெளிப்படுத்தி யிருக்கின்றனர். அவைகளெல்லாம் நல்ல முறையில் மாணவர்க்கு மிகவும் பயன்படுமாறு எழுதப்பட்டிருக்கின்றன என்று ஆசிரியர்கள் பேசிக்கொள்ளுகின்றனர்.

இங்ஙனம்
தங்கள் அன்புள்ள
கந்தன்

PRINTED AT THE B. N. PRESS, MADRAS.—1932.

32
2-166


திருச்சிராப்பள்ளி E. R. ஹைஸ்கூல் தமிழாசிரியர்

**ம. பெரியசாமிப் பிள்ளை**

எழுதியவை

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| பூந்தமிழ் வாசகம் முதற் புத்தகம் | 0 | 2 | 6 |
| ” ” இரண்டாம் புத்தகம் | 0 | 3 | 0 |
| ” ” மூன்றாம் புத்தகம் | 0 | 4 | 0 |
| ” ” நான்காம் புத்தகம் | 0 | 5 | 0 |
| ” ” ஐந்தாம் புத்தகம் | 0 | 6 | 0 |
| S. S. L. C. தமிழ் இலக்கணம் | 0 | 12 | 0 |
| முதல், இரண்டு, மூன்றாம் பாரத் தமிழ் இலக்கணம் | 0 | 9 | 0 |
| ஐந்தாம் வகுப்புத் தமிழ் இலக்கணம் | 0 | 3 | 0 |

---

சோழவந்தான் போர்ட் ஹைஸ்கூல் தமிழாசிரியர்

**க. பழநிக்குமாரப் பிள்ளை**

எழுதிய

**பைந்தமிழ்ப் பாட புத்தகங்கள்**

| | | | |
|---|---|---|---|
| முதலாவது (ஆறாம் வகுப்பு - முதல் பாரம்) | 0 | 7 | 0 |
| இரண்டாவது (ஏழாம் வகுப்பு-இரண்டாம் பாரம்) | 0 | 8 | 0 |
| மூன்றாவது (எட்டாம் வகுப்பு-மூன்றாம் பாரம்) | 0 | 9 | 0 |

---

சென்னை தியாகராயர் கலாசாலைத் தமிழாசிரியர்

**மா. இராஜமாணிக்கம்**

எழுதிய

| | | | |
|---|---|---|---|
| முடியுடை மூவேந்தர் | 0 | 12 | 0 |

---

திருச்சிராப்பள்ளி நேஷனல் ஹைஸ்கூல் தமிழாசிரியர்

**S. P. கந்தசாமி ஐயா**

எழுதிய

| | | | |
|---|---|---|---|
| நவீன தமிழ் வாசகம் முதற் புத்தகம் | 0 | 2 | 6 |

---

**T. G. கோபால் பிள்ளை,**

**தேப்பக்குளம், திருச்சிராப்பள்ளி.**